கோவில் வெளியீடு.



உ

திருச்சிற்றம்பலம்.

# சங்கரநயினர்கோவில் வரலாறு.











" சலம்இலன் சங்கரன் சார்ந்தவர்க் கல்லால்
நலன்இலன் நாடொறு நல்குவான் நலன்
குலம்இலர் ஆகிலும் குலத்துக் கேற்பதோர்
...க் கொடுப்பது நமச்சிவாயவே."

—திருநாவுக்கரசர்.



1961.

உ

திருச்சிற்றம்பலம்

# சங்கரநயினர்கோவில் வரலாறு

---


ஆசிரியர் :

திருவாளர் கணியர், பெரும்புலவர், டாக்டர்,

**இ. மு. சுப்பிரமணிய பிள்ளை அவர்கள்,**

தலைமைத் தமிழாசிரியர்,

அமைச்சர், சென்னை மாகாணத் தமிழ்ச் சங்கம்,

**சங்கரநயினர்கோவில்.**


---


**ஐந்தாம் பதிப்பு.**

1961.

**கோயில் வெளியீடு]**

**[விலை ந. பை 38.** 50

# சங்கரனுர் - கோமதித்தாய் திருக்கோவில்



ராஜகோபுரமும், நாகசுனையும்.

உ

சிவமயம்.

# ஸ்ரீ சங்கரநாராயண சுவாமி கோவில், சங்கரநயினார்கோவில்.

---

*தலம்:* **சங்கரநயினார்கோவில்.**

*மூர்த்தி:* **ஸ்ரீ சங்கரலிங்கசுவாமி**

*இறைவி:* **ஸ்ரீ கோமதி அம்பிகை** என்ற **ஆவுடையம்மன்**

*தீர்த்தம்:* **நாகசுனை**

*உற்சவர்:* **உமாமஹேஸ்வரர்**

*தலவிருக்ஷம்:* **புன்னை**

*சிறப்பு:* **ஆடித்தபசு விழா: ஸ்ரீ சங்கரநாராயணசுவாமி**

*ஆகமம்:* **காமிகாமம்**

*தொன்மை:* **கி. பி. 1022 (கோயிலமைப்பு)**

*கோயில் கட்டியவர்:* **உக்கிரபாண்டிய அரசர்**

*இருக்குமிடம்:* **விருதுநகர் — தென்காசி குறுக்குவழி ரயில்பாதையில்**

*தலபுராணம் ஆசிரியர்:* **சீவலமாற பாண்டியர்**

## கோயில் ஆட்சி.

*தர்மகர்த்தர் குழு: (1961)*

**உயர்திரு. அமராபதி நாடார்**, தலைவர். சங்கரன்கோவில்.

,, **A. V. Rm. S. இராமசுவாமி முதலியார்**, சங்கரன்கோவில்.

,, **P. ஊர்காவலன்**, M. L. A., சென்னை சட்டசபை உறுப்பினர், சங்கரன்கோவில்.

,, **M. சங்கரபாண்டியன்**, B. A., M. P., புளியங்குடி, டெல்ஹி (லோக சபை) பாராளுமன்ற உறுப்பினர்.

,, **R. சென்னப்ப ரெட்டியார்**, *சங்கரன்கோவில்.*

*தர்மகர்த்தர்கள்.*

*நிர்வாக அதிகாரி:* **V. M. சிதம்பரம் பிள்ளை.**

ஹிந்து சமய அறநிலைய இலாக்கா, சென்னை அமைச்சர்

**உயர்திரு. M. பக்தவத்ஸலம் அவர்கள், B. A., B. L., சென்னை.**

*கமிஷனர்:* **உயர்திரு. M. S. சாரங்கபாணி முதலியார் அவர்கள்,** *பீ. ஏ., பீ. எல்.,* **சென்னை**

*டெபுடி கமிஷனர்:* ,, **A. சர்க்கரை அவர்கள், B. A., B. L., மதுரை.**

*உதவி கமிஷனர்:* ,, **G. ஆதிமூலம் அவர்கள், B. A., B. L., திருநெல்வேலி.**

சிவமயம்.

# முன்னுரை.



தென்பாண்டி நாட்டிலுள்ள சிவஸ்தலங்களில் சங்கரநயினர்கோயில் ஓர் முக்கிய ஸ்தலம். சைவசமயகுரவர்கள் அல்லது ஆழ்வார்கள் யாரானு மொருவர் இத்தலத்தைப் பாடிலரேனும் அதன் பெருமைக்கும் தொன்மைக்கும் குறைவில்லை. உலக மாதாவாகிய பார்வதிதேவியின் வேண்டு கோளின்படி முழுமுதலிறைவனுகிய பரமேஸ்வரன், தன்னுள் ளடங்கிய நாராயணனை வெளிப்படையாகத் தன் வாமபாகத்தில் காட்டியருளிய பேறுபெற்றது இத்தலம். இக்காட்சி ஒவ்வொரு வருடமும் ஆடி மாதத் தபசுத் திருவிழா இறுதிநாளில் நடக்கும். அவ்வமயம் இச்சில்லா, பக்க சில்லாக்களின் பல ஊர்களினின்றும் பல்லாயிர மக்கள் இங்கே கூடி இக்காட்சி யைக் கண்டு ஆரவாரஞ் செய்வது வழக்கம். இத்தலத்திலுள்ள சங்கரலிங்கப்பெருமானின் தேவியாராகிய கோமதியம்மையின் திருவருள் விளக்கமே இக்கோயிலின் மேன்மைக்கு மற்றொரு முக்கிய காரணம். அம்மையின் சன்னதியில் குட்டம், குன்மம் முதலிய கடுநோய்வாய்ப்பட்டவர்கள், பேய்பிடித்தவர்கள், புத்தி ஸ்வாதீனமில்லாதவர்கள் உபாசனை செய்தும், இங்குள்ள புற்றுமண்ணை உடம்பிற் பூசியும் நோய் நீக்கம் பெற்று வருவதை இன்றுங் கண்கூடாகக் காணலாம்.

இக்கோயில் சுமார் 900 வருடங்களுக்கு முன்பு பொருநை யாற்றின் கரையிலுள்ள மணலூரில் அரசாண்ட உக்கிரம பாண்டியராற் கட்டப்பட்டதென்று கல்வெட்டுக்களிலிருந்து தெரிய வருகின்றது. பிற்காலத்தில் பற்பல திருப்பணியாளர் களும் கோயில் அதிகாரிகளும் கட்டட விரிவுகள், சீர்திருத்தங்கள், புது மண்டபங்கள், சிறு கோபுரங்கள், கிணறுகள், நந்தவனங்கள் அழகான வர்ண வேலைகள் செய்து

வைத்திருக்கிறார்கள். விழாக்காலங்களில் கிணற்றிலிருந்து ஊருக்குள் குழாய் வழியாய்த் தண்ணீர் கொண்டுவர ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறது. தற்கால நாகரீகத்திற்கேற்ப மின்சார விளக்குகள் அமைத்தும் தரிசனைக்கு வரும் பிரயாணிகள் தங்க ஏழு ஜாகைகளடங்கிய ஓர் விடுதி கட்டியும் இருக்கின்றார்கள். புல்லும் புதரும் அடர்ந்த இடங்களெல்லாம் இப்போது தூய்மையாகி பக்தி விளைவிக்கும் கோலமளிக்கின்றன. 1950 டிஸம்பர் மாதத்தில் திருவாவடுதுறை ஆதீனம் 20-வது பட்டம் ஸ்ரீலஸ்ரீ அம்பலவாண பரமாச்சாரிய சுவாமிகளவர்கள் இத்திருக்கோயில் வந்து சிறப்பொடு பூசனை செய்வித்து வழிபாடியற்றினார்கள். ஓர் நூல் நிலையம் ஒழுங்காக நடைபெற்று வருகின்றது.

இவ்வரலாற்றுப் புத்தகம் இக்கோயிலின் பல்விதப் பெருமைகளை எடுத்துரைக்கும். இறைவன் இன்ன தலத்தில் இன்ன திருவிளையாடல் புரிந்தானென்பதை அறிந்து கொண்டால் அத்தலத்தின் பெருமை நன்கு விளங்கும். இச்சீரிய முறையில் இப்புத்தகம் மக்களுக்குப் பயன்படும். இதற்கு முன் 4-வது பதிப்புக்காலத்திற்கும் இவ்வெளியீடு வருவதற்குமுள்ள இடைக்காலத்தில் அநேக திருப்பணிகள் நடந்திருக்கின்றன. எல்லாம் தர்மகர்த்தர்கள், நிர்வாக அதிகாரிகளின் அக்கரை கொண்ட நல்ல ஆட்சியும் முயற்சியுமே.

இப்போதுள்ள தர்மகர்த்தர்கள் திரு. **E.** அமராபதி நாடார் அவர்கள் (தலைவர், தர்மகர்த்தர் குழு) **A. V. Rm. S.** இராமசுவாமி முதலியார் அவர்கள், **P.** ஊர்காவலன் அவர்கள் **M. L. A., M.** சங்கரபாண்டியன் பிள்ளையவர்கள் **B. A., M. P., R.** சென்னப்ப ரெட்டியார் அவர்கள், நிர்வாக அதிகாரி திரு. **V. M.** சிதம்பரம் பிள்ளை அவர்கள் இவர்களுடைய ஆர்வமும், ஊக்கமும் பாராட்டுக்குரியன, அனைவரும் ஏகமனதுடன் கோயிலின் நன்மையே குறிக்கோளாக வைத்து, “என்கடன் பணிசெய்து கிடப்பதே” என்ற அப்பர் சுவாமிகளின் திருவாக்கை மந்திரமாகக் கொண்டு கண்ணுங் கருத்துமாய்

உழைத்துவருவது ஆலய உலகத்தில் ஓர் நல்ல எடுத்துக் காட்டாக விளங்குகின்றது.

எளிய நடையும் இன்சுவையுங் கலந்த தீந்தமிழில் எல்லாக் குறிப்புகளையும் உள்ளடக்கி இவ்வரலாறு எழுதிய பெரும் புலவர் இ. மு. சுப்பிரமணிய பிள்ளையவர்களுக்குத் தமிழுலகம் கடப்பாடுடையது. இப்பதிப்பில் முக்கிய சில குறிப்புகள் சற்றே விரிவாகவும், சில சுருக்கியும், இன்னுஞ் சில சேர்த்தும் எழுதப்பெற்றிருக்கின்றன. அதிக விளக்கம் விழைபவர் கோயில் இலக்கியங்களைப் படித்துப் பயன் பெறலாம். அடியேனையும் ஒரு பொருட்டாக மதித்து இப் பதிப்பைக் கண்காணிக்கப் பணித்த கோயில் தர்மகர்த்தரவர் களுக்கும், நிர்வாக அதிகாரியவர்களுக்கும் எனது மனமுவந்த நன்றி. அவசியமான குறிப்புகள் அவ்வப்போது கொடுத்துதவிய கோயில் அலுவலர்கள் அனைவருக்கும் எனது நன்றி. இப்பதிப்பைத் தூண்டிய ஸ்ரீ சங்கரலிங்கசுவாமி, கோமதித் தாய், சங்கரநாராயணர் மூவர்களின் திருவருளைப் பணிவுடன் வணங்குகின்றேன். இவர்கள் கோயிலார் அனைவருக்கும் பொன்னும், பொருளும், புகழும். ஆயுளும் அருளுமாறு அவர்கள் பூங்கழல்களை இறைஞ்சுகின்றேன்.

ஆ. சி. சண்முகநயினார்,
பீ. ஏ., பீ. எல்.,
நீதிவாதி : மாசி ஆட்சித் தர்மகர்த்தர்,
திருக்குற்றாலநாதசுவாமி கோயில்,
திருக்குற்றாலம்.

தென்காசி,
1-8-61.

சிவமயம்

# சங்கரநயினர்கோவில் வரலாறு.

சீரோங்குந் தென்பாண்டிச் செஞ்சாலிச் சங்கரனார்
பேரோங்குங் கோவிற் பெருமிதத்தை—நாரோங்குஞ்
சிந்தை நினைக்கச் செவிகேட்கக் கைகுவித்து
வந்தித்து நின்றேன் மகிழ்ந்து.

## க. இட அமைப்பு.

**கோவில் இருக்கும் இடம் — சில்லா — தாலுகா — ஊர், இரயிலடி — மோட்டார் வசதி முதலியன.**

தென் பாண்டி நாடே சிவலோகம். அதன்கண் தென் கோடியிலுள்ள திருநெல்வேலிச் சில்லா செந்தமிழ் வழங்குஞ் சீர்மையது. அம்பலவாணர் விரும்பிக் கூத்தாடும் சீர்மிகப் பெற்ற இடங்கள் ஐந்து. அவை அரதன அம்பலமாகிய திருவாலங்காடு, பொன்னம்பலமாகிய சிதம்பரம், வெள்ளி யம்பலமாகிய மதுரை, செப்பறையாகிய திருநெல்வேலி, சித்திர அம்பலமாகிய திருக்குற்றாலம் என்பன. இந்த ஐந்தில் இரண்டுடைய பெருமையது திருநெல்வேலிச் சில்லா.

திருநெல்வேலிச் சில்லாவிலுள்ள பெரிய கோவில்கள் திருநெல்வேலி, திருச்செந்தூர், சங்கரன்கோவில், திருக்குற்றாலம் என்பன. இவைகளில் நாம் இங்கே விவரிக்கக் குறித்துக்கொண்ட சங்கரன்கோவில் இருக்கும் சங்கரநயினார் கோவில் என்ற ஊர் சங்கரநயினார்கோவில் தாலுகாவின்

தலைநகரம். இதிலிருந்து தெற்கே சிறிது கிழக்கே சாய்வாக முப்பத்துமூன்று மைல் தூரத்தில் திருநெல்வேலி இருக்கிறது. நேரே கிழக்கே பன்னிரண்டாவது மைலில் கழுகுமலையும், இருபத்து நான்காவது மைலில் கோவிற்பட்டியும் இருக்கின்றன. நேரே வடக்கே ஏழாவது மைலில் கரிவலம்வந்த நல்லூரும், இருபதாவது மைலில் இராசபாளையமும், இருபத்தேழாவது மைலில் சீவில்லிபுத்தூரும் இருக்கின்றன. நேரே மேற்கே பத்தாவது மைலில் புளியன்குடி இருக்கிறது. இவ்வூர்களுக்கெல்லாம் நல்ல கற்சாலைகள் இருப்பதால் அடிக்கடி வாடகை மோட்டார் வண்டிகள் ஓடுகின்றன.

தென் ரெயில்வேயின் விருதுநகர் — தென்காசிக் குறுக்குப் பாதையில் சங்கரன்கோவில் இருக்கிறது. இதற்கு வடக்கே இராசபாளையம், சீவில்லிப்புத்தூரும், தெற்கே கடையநல்லூர், தென்காசியும் உள. சங்கரன்கோவில் இரயிலடியிலிருந்து கோவில் ஒரு மைல் தூரத்தில் இருக்கிறது. இரயிலடியில், ஊருக்குள் வர வாடகைக்கு எப்போதும் மாட்டு வண்டிகளும் குதிரை வண்டிகளும் கிடைக்கும். பெரும்பாலோர் இரயிலடியிலிருந்து ஊர்க் குளத்தின் வழியாகக் குறுக்கே நடந்து வருகின்றனர். இவ்வழி அரை மைல்தான் இருக்கும். ஊர்க் குளத்தின் உள்வாயின் வடமேற்குப் பகுதியில் இரயில் நிலையம் இருக்கிறது. ஊரிலிருந்து இரயிலடி வெகு தூரத்திலிருந்தும், இப்போது ஊர் வளர்ச்சியினாலே கட்டிடங்கள் நெருங்கிவருவதால் இன்னும் சில ஆண்டுகளில் ஊருடன் ஒன்றுசேர்ந்துவிடலாம்.

## மலை, குன்று, ஆறு, ஏரி.

ஊருக்கு வடமேற்கே பூலித்தேவர் பொற்றை என்ற பெயருடைய சிறு குன்றுகள் இருக்கின்றன. மேற்குத் தொடர்ச்சி மலை இவ்வூரின் மேற்கே பன்னிரண்டாவது மைலில் இருக்கிறது. ஊரைச் சுற்றிப் பல குளங்கள் இருக்கின்றன. வடமேற்கே இருப்பது ஊர்க்குளம், தெற்கே பொட்டற்குளமும், தென் கிழக்கே பாட்டக்குளமும் உள. இக்குளங்களுக்கு ஊரைச்சுற்றி ஏராளமாக நஞ்சை நிலங்கள்

உள்ளன. ஊருக்குத் தெற்கே பாட்டக்குளத்தில் போய்விழும் ஒரு சிற்றோடை இருக்கிறது. இதில் மழை நீரும், பொட்டற் குளக் கழிவு நீருமே ஓடும், இவ்வோடைக்குக் கூழையாறு என்ற பெயர் வழங்கப்பெறுகிறது. கோவிலினுள் இருக்கும் நாகசுனை தீர்த்தமாகப் பலர் முழுகப் பயன்படுகிறது. ஆவுடைப் பொய்கை என்ற தெப்பம் ஊருக்குத் தெற்கே இருக்கிறது, இதுவும் மேற்கேயுள்ள கோவிந்தப்பன் ஏரியும் படித்துறைகளோடு விளங்குகின்றன. இவை தவிர வேறு சில சிறு சிறு குளங்களும் ஊர் நடுவே உள.

## ஊரின் தட்ப வெட்ப நிலை.

சங்கரநயினர்கோவில் தாலூகா மழை வளத்தில் மிகவும் குறைந்தது. தென்மேற்குச் சாரற்காற்று, மேற்குத் தொடர்ச்சி மலையோடு முடிவடைவதனால் சாரல் மழை இவ்வூருக்கு எட்டுவதில்லை. வடகிழக்குப் பருவக்காற்று கொண்டு வரும் மழையும் முடிவிடமாக இருத்தலினாலே இவ்வூரில் மழை பெய்வது அருமையினும் அருமையே. அதனாலே இவ்வூரில் அடிக்கடி குளங்கள் நிரம்பாமல் பயிர்கள் விளைவதில்லை. சித்திரை பத்தின் மேல்தொடங்கி ஆவணி புரட்டாசி முடிய மேல்காற்று பேய்போல் அடிக்கும். அதனால், குடியானவர்கள் தங்கள் நிலங்களில் ஆழமான கிணறுகளை வெட்டிக்கொண்டு வாழை, மிளகாய், கத்திரி முதலிய தோட்டப் பயிர்கள் செய்து அரும்பாடுபடுகின்றனர். குளிப்பதற்கும் குடிப்பதற்கும் கிணற்று நீரே பயன்படுவதால் இங்கே தொத்து நோய்களுக்கு இடமில்லை. கிடைப்பதற்கு அருமையான சங்கரனர் கோமதி யம்மையின் திருக்கோலக் காட்சியைக் காண வெகு தொலைவி லுள்ள ஊர்களிலிருந்து மக்கள் பலர் நாடோறும் வருவாரும் போவாருமாக இருக்கின்றனர்.

## சத்திரங்கள், சாவடிகள், தங்கும் இடவசதிகள்.

உயரிய அரசியல் அலுவலாளர்கள் தங்குவதற்கு வழிப் போக்கர் விடுதி (Travellers' Bungalow) இருக்கிறது.

சத்திரம் பழைய ஜில்லா நாட்டாண்மைக் கழகத்தாரால் உயர் பள்ளிக் கூடத்துக்குக் கொடுக்கப் பெற்றிருந்தது. இது மிக புண்ணியமான செயலே. மேலைத்தேர்வீதியிலும், வடக்குத் தேர்வீதியிலும் சத்திரங்கள் பல உள. மேலை வீதியில் திருவாவடுதுறை மடம் இருக்கிறது. இரயிலடியில் விழாக் காலங்களில் மக்கள் தங்குவதற்குப் பெரியதோர் சாவடி கட்டப்பட்டிருக்கிறது. திருவிழாக் காலங்களில் குடியானவர்கள் தங்கள் வீடுகளிற் பலி பகுதிகளை அயலூ ராருக்குத் தங்கும் பொருட்டு வசதி செய்து கொடுத்து வாடகை வாங்குகின்றனர். யாத்ரீகர்கள் வசதிக்காகக் கோயிலார் அம்மன் சந்நிதியில் 7 வீடுகள் கட்டி வாடகைக்கு கொடுக்கின்றனர். மின்சார விசிறி அமைந்த வீட்டிற்கு சாதாரண காலத்தில் நாள் வாடகை ரூ. 1-ம், அஃதில்லா வீட்டிற்கு ரூ. 0.75-ம் விழாக்காலங்களில் இவ்வாடகை இரட்டிப்பாகவும் வசூலிக்கப்படும். இவ்வீடுகளில் மேல் மாடி கட்டவும் கோயிலார் திட்டமிட்டிருக்கின்றனர்.

**தலத்தின் வேறு பெயர்கள்:-** பூகைலாயம், புன்னைவனம், சீராசபுரம், சீராசை, வாராசைபுரம், கூழை நகர் என்பன.

## உ. கோவில்.

### கோவிலின் தோற்றம்.

சங்கரநயினார்கோவில் ஐம்பூத தலங்களில் ஒன்று. இது மண் தலம், தாருகாபுரம் நீர்த்தலம், தென்மலை காற்றுத்தலம், கரிவலம்வந்தநல்லூர் தீத்தலம், தேவதானம் ஆகாயத்தலம். இவ்வைந்தனுள் சங்கரநயினார்கோவிலே முதன்மையானது. சில ஆண்டுகளுக்கு முன்வரை சிவராத்திரியன்று பல அடியார்கள் ஒன்றுகூடி இவ்வைந்து கோவில்களையும் அவ்விரவிலேயே கால்நடையாகச்சென்று வழிபட்டு வந்தார்கள். இப்போதும் சிலர் அங்ஙனம் செய்துவருகிறார்கள்.

சங்கரனுர் திருக்கோவிலின் முகப்பில் நூற்று இருபத்தைந்து அடி உயரமுள்ள ஒரு பெரிய கோபுரம் இருக்கிறது. இது ஒன்பது நிலை உடையது. கோபுரத்தின் உச்சி தென்வடல் நீளம் ஐம்பத்தாறு அடி; கிழமேல் அகலம் பதினைந்து அடி; உச்சியிலுள்ள குடம் ஏழடி நான்கு அங்குலம் உயரம் இருக்கிறது. கோபுரத்தின் ஒன்பதாவது நிலையில் கீழ்புறமாக ஒரு பெரிய மணி தொங்கிற்று; இதற்கு அருகில் ஒரு கடிகார இயந்திரம் இருந்தது. இது சுமார் ஐம்பது ஆண்டுகளுக்கு முன் சீர்கேடான நிலையை அடைந்துவிட்டது. இது சரியாக இருந்த காலத்தில் இந்தக் கடிகாரம் இம்மணியை இரண்டு நாழிகைக்கு ஒருமுறை அடித்துவந்ததாம். அதனுல் இது நாழிகைக் கடிகாரம் என்று பெயர் பெற்றது. பகல் முப்பதாவது நாழிகையானவுடன் இது பதினைந்து மணி அடிக்கும். மறுபடி இரவு இரண்டு நாழிகையானவுடன் ஓர் அடி அடிக்குமாம். இம்மணியோசை சுற்றிப் பல மைல்களுக்குக் கேட்டு வந்ததாம். இக்கடிகாரப் பணியாளராகிய ஆசாரிக்கு மானிபம் இருந்துவந்தது. இப்போது கடிகாரம் அடித்துவராத காரணத்தால் இம்மானிபத்தை அரசாங்கத்தார் எடுத்துக்கொண்டார்கள் என்று தெரிகிறது.

பல மைல்களுக்கு அப்பால் வரும்போதே இக் கோபுரம் தெரியும். அதனுல் இவ்வூரை நோக்கி வருபவர் யாவரும் நெடுந்தூரத்திலிருந்தே சங்கரலிங்கப் பெருமானையும் கோமதியம்மையையும் நினைந்துகொண்டு அன்புநிறைந்த மனத்துடன் வருகிருர்கள். கோபுரம் உச்சியில் ஏறி நின்றுகொண்டு நாற்புறமும் நோக்கினுல் நாம் பல அரிய காட்சிகளைக்கண்டு மகிழலாம். சூழ இருபத்தைந்து முப்பது மைல் வரையுள்ள குன்றுகள், பேரூர்கள், குளங்கள், சாலைகள் யாவும் புலனுகின்றன.

கோபுரத்தின் முன் ஒரு பெரிய மண்டபம் இருக்கிறது. அதன் முன் நின்று கோவிலைப் பார்த்தால் ஆயிரக்கணக்கான அடியார்கள் நின்று வணங்கப் போதுமான இடமுடைய அம்மண்டபமும், அதற்கப்பால் குடைவருவாசலும், அதற்கும்

அப்பால் இறைவனுடைய கோவிலின் இணையில்லாக்காட்சியும் பார்ப்போர் உள்ளத்தைக் கொள்ளை கொள்வனவாம். பெரிய மண்டபத்திற்கு முன் இப்போது ஓர் புதிய மண்டபம் கட்டப்பட்டிருக்கிறது.

## அகல, நீள, அளவு.

கோவில் ஊருக்கு நடுவே நான்கு மாடவீதிகளாலும் அவைகளை அடுத்து அப்பாலுள்ள நான்கு தேரோடும் தெருக்களாலும் சூழப்பெற்று விளங்குகின்றது. சுமார் 4 ஏக்கர் நிலப்பரப்பில் அமைந்திருக்கிறது. அதன் கிழமேல் நீளம் 592 அடி. தென்வடல் அகலம் 306 அடி.

## திருக்கோயிலும், அதன் பகுதிகளும், சுற்றுக்கள் (பிரகாரங்கள்) அவற்றின் பெயர்.

சங்கரனூர் திருக்கோவில் சங்கரலிங்கர் கோவில், கோமதியம்மை கோவில், சங்கரநாராயணர் கோவில் என மூன்று பெரும் பகுதிகளாக இருக்கின்றது. கோவிலின் தலைவாயிலுக்கு நேரே இருப்பது சங்கரலிங்கப்பெருமான்கோவில்; இது தென் பகுதியில் இருக்கிறது. வடபகுதியில் கோமதியம்மை திருக்கோவில் அமைந்துள்ளது. இவ்விரண்டு கோவில்களுக்கும் தனித்தனி கருப்பக்கிரகம், அர்த்தமண்டபம், அந்தராள மண்டபம், மணிமண்டபம், மா மண்டபம், பரிவார மண்டபம், சுற்று மண்டபங்கள் இருக்கின்றன. சங்கரனூர் திருக்கோயில் எல்லாப் பக்கமும் திருமுறைப் பாக்கள் பொறிக்கப்பட்டிருக்கின்றன. சில பாக்கள் வெண் சலவைக் கற்களில் பொறிக்கப்பட்டுச் சுவர்களில் பதிக்கப் பெற்றிருக்கின்றன.

தென்பகுதியிலுள்ள சங்கரலிங்கப் பெருமாள் திருக்கோயிலில் கொடிமரம். பலிபீடம் தாண்டி உட்புக முகப்பில் அதிகார நந்தியும் குண்டல சக்தியும் அமைந்திருக்கின்றன. கீழப்பிரகாரம் வலதுபுறம் தூணில் இக்கோயில் கட்டிய

உக்கிர பாண்டிய அரசன் உருவச் சிலையும் இடதுபுறத் தூணில் உமாபதி சிவமும் நின்று வணங்கும் கோலத்தில் அமைந் திருக்கின்றன. தெற்குப்பிரகாரத்தில் சைவ சமய குரவர் இவ் வரிசையில் எழுந்தருளியிருக்கின்றனர். 1. மாணிக்கவாசகர். 2. திருநாவுக்கரசர். 3. திருஞானசம்பந்தர். 4. சுந்தர மூர்த்தி. தொடர்ந்து திருத்தொண்டர் புராணமியற்றிய சேக்கிழார் சுவாமிகள், மகாவிஷ்ணு, அறுபத்து மூன்று நாயன்மார்கள், சூரதேவர், காந்தாரி, பிரமசக்தி, ஈசசக்தி, குமாரசக்தி, விஷ்ணுசக்தி, வராஹசக்தி, இந்திரசக்தி, சாமுண்டிசக்தி, எழுந்தருளியுள்ளனர். பின், பிருதிவி, அப்பு, தேயு, வாயு, ஆகாசலிங்கங்களைக் காணலாம். மேலப் பிரகாரம் ஆரம்பத்தில் கன்னிவிநாயகருக்கு அடுத்தாற்போல் உற்சவ மூர்த்தியாகிய உமாமஹேஸ்வரர் தேவியாருடன் காட்சி கொடுக்கின்றார். பின்பு பிக்ஷாடனர், சரஸ்வதி, இலக்குமி, வருகின்றனர். அடுத்து சுப்பிரமணியர், வள்ளி, தெய்வயானையுடன் எழுந்தருளியிருக்கின்றார். வடக்குப் பிரகாரம் தென்பக்கம் ஓர் புற்றில் வன்மீகநாதரிருக்கின்றார். சண்டிகேஸ்வரர் கோயிலும் இங்கேயுள்ளது. வடபக்கம் சனி பகவான். காசிவிசுவநாதர், பைரவர், துர்க்காதேவி காணலாம். கீழப்பிரகாரத்தில் சந்திர, சூரியர்கள் ஒளி வீசிக் கொண்டிருக்கின்றனர்.

சங்கரர்கோயில் ஓர் அழகிய கோயில். மகாமண்டபத்தைச் சுற்றி பல திருஉருவங்கள் நான்கு பக்கங்களிலும் செதுக்கப் பட்டிருக்கின்றன. உருவங்கள் சிறிதெனினும் சிற்பச் செறிவு பாராட்டத்தக்கது. அவையாவன: துவாரபாலகர், யோக நரஸிம்மம், கார்த்தவீரியன், தசகண்ட ராவணன், ஹிரண்ய சம்ஹாரமூர்த்தி, கணபதி, வீணைகாளி, பத்திரகாளி, மாறியாடும் பெருமாள், அகோர வீரபத்திரர், நடராஜர், துவாரபாலகர் 2, ரிஷபாரூடர், உபதேச தக்ஷிணாமூர்த்தி, ருத்ர மூர்த்தி, ஐம்முகப் பிரமா, ஸிம்ஹவாஹன கணபதி, ஸ்ரீராமர், மன்மதன், வெங்கடாசலபதி, செண்பக வில்வவாராகி, சங்கரநாராயணர், சந்திரசேகரர், துவார

பாலகர் 2. உக்ரபாண்டிய அரசர். ஸிம்ஹாசனேஸ்வரி, மஹா விஷ்ணு, பாலசுப்பிரமணியர், துர்க்காதேவி, ஷண்முகர், மகிஷாசுரமர்த்தனி, கபாலி, காலபைரவர், ஊர்த்துவ தாண்டவர், தில்லேக்காளி, கஜசம்ஹாரமூர்த்தி, தக்ஷ சம்ஹார மூர்த்தி, உச்சிட்ட கணபதி, ராமர், லக்ஷ்மணர், பரமேஸ்வரர், மயூராரூடர், மஹா விஷ்ணு, வீரபத்திரர், பைரவர், த்ரிவிக்ரமர், வாமனுவதாரம், ஹம்சாரூடர், துவாரபாலகர்,

இம்மதிலேச் சுற்றி தென்பக்கம் தக்ஷணமூர்த்தி, மேல் பக்கம் நரஸிம்ம மூர்த்தி வடபக்கம் பிரமாவும் எழுந்தருளியுள்ளனர்.

திருக்கோயில் கர்பக்கிரஹத்தில் சங்கரலிங்கப் பெருமான் சிறிய உருவமா யெழுந்தருளியிருந்து தன்னே வழிபடுவர் களுக்குப் பெருங்கருணே பாலித்து வருகின்ருர். கூடவே மனேன்மணி தேவியும் அழகாக வீற்றிருக்கின்ருள். மண்டபத்தில் தெற்கு பார்க்க நடராஜமூர்த்தி ஊன நடனமும், ஞான நடனமும் செய்தருளுகின்ருர். சிவகாமி அம்மையார் தாளம் போடுகின்றனர். காரைக்காலம்மையார் கூடவே இத்திருக்கூத்தைக் கண்டு ஆனந்தத்தில் மூழ்கி பாடிக் கொண்டிருக்கின்ருள்.

வடபகுதியிலுள்ள கோமதியம்மை கோயில் முன்புக்கு ஸ்ரீ சக்கரம் எழுதி ஸ்தாபிக்கப் பெற்றிருக்கிறது. இங்கேயே பிணியாளர்கள் அமர்ந்து அம்மையை நோக்கித் தவஞ்செய்து பிணி நீக்கம் பெறுவார்கள். நறுநெய் ஊற்றி மாவிளக்கு ஏற்றி வழிபடுவார்கள். வடக்குப் பிரகாரத்தில் சகல நோய்களேயும் தீர்க்கவல்ல புற்று மருந்து இருக்கின்றது. கோமதியம்மையின் திரு உருவம் கல்மனத்தையும் கரைக்கும் பேரழகு வாய்ந்தது. இவள் அழகில் ஈடு படாதவர்களில்லே. என்றும் மறக்க முடியாத திருக்கோலமும் அவள் திருக்கண்நோக்கும் உள்ள இவ்வம்மையே இக்கோயிலின் பெருமைக்கு ஓர் முக்கிய

காரணம். இவள் அருள் உருவத்தில் ஈடுபட்ட திருநெல்வேலி அழகிய சொக்கநாத பிள்ளை பின்வருமாறு கேட்கின்றார்

''கேடாவரும் நமனைக் கிட்டவராதே தூரப்
'போடா' என்றோட்டி உன்தன் பொற்கமலத்தாள் நிழற்கீழ்
வாடா என அழைத்து வாழ்வித்தால் அம்ம! உனைக்
கூடா தென்றார் தடுப்பார் கோமதித்தாய் ஈஸ்வரியே.

பள்ளியறை கன்னி திசையிலிருக்கின்றது. கோயில் முன் கொடிமரமும் பலிபீடமும் உண்டு.

இறைவன், இறைவி கோயில்களுக்கு நடுவே சங்கர நாராயணர் கோயில் இருக்கிறது. இதில் கர்ப்பக்கிரஹம், அர்த்த மண்டபம், மாமண்டபம், சுற்று மண்டபம் உள்ளன. இக்கோயில்முன், பெருங் கூட்டங்கூடி விரிவுரை, இசையரங்கு, திருமணம் நடப்பதற்கு ஏற்ற ஒரு பெரிய மண்டபம் இருக்கிறது. இம்மண்டபத்தில் அடிக்கடி இவ்விசேடங்கள் நடைபெறும், இக்கோயில் பிரகாரச் சுவர்களில் பற்பல ஓவியங்கள் கண்கவரும்படி தீட்டப்பட்டிருக்கின்றன. இவைகளில் முக்கியமானவை தருண கணபதி, பக்தி கணபதி, வீர கணபதி, பிங்கல கணபதி, உச்சிஷ்ட கணபதி, சிப்பிர கணபதி, லெக்ஷிமி கணபதி, விக்னேஸ்வர கணபதி, ஹேரம்ப கணபதி, நர்த்தன கணபதி, புவன கணபதி, ஊர்த்த கணபதி, சக்தி கணபதி, நித்திய கணபதி, வல்லப கணபதி, மகா கணபதி, ஸ்ரீ அரங்கநாதர் சயனம், ஞான சக்திதரர், தண்டாயுதபாணி, தேவ ஸேனதிபதி, சுப்பிரமணியர், யோக தண்டாயுதபாணி, கஜவாகனர். சரவணபவர், கார்த்திகேயர், குமாரர், ஷண்முகர், தாரகாரி தேவ ஸேனபதி, பிரம்மஸாத்தர், வள்ளியம்மை திருமணம், பாவுண்ணதர், பாலசாமி, மச்ச, கூர்ம, வராக, நரஸிம்ஹ, வாமன, பரசுராம, கோதண்டராம, பலராம, காளிங்க நர்த்தன, கல்கி அவதாரங்கள், கோவர்த்தனகிரி, வேணுகோபாலகிருஷ்ணன் முதலியன.

இக்கோயிலில் எழுந்தருளியிருக்கும் சங்கரநாராயணர் திருஉருவம் வலது பக்கம் ஈஸ்வரனாகவும், இடது பக்கம் திருமாலாகவும் ஒரே உருவத்தில் அழகாய்ச் செய்யப்பெற்றது. வலது பக்கம் சங்கரர் மான், அரவம், சந்திரனுடன் தோற்ற மளிப்பார். இடது பக்கம் சக்தி அம்சமாகிய திருமால் சங்கு சக்கரத்துடன் தோற்றமளிப்பார். வலது பக்கம் திருநீறு, இடதுபக்கம் திருமண். வலது பக்கம் சிவப்பு நிறம், இடது பக்கம் நீலநிறம். இவ்வருமைத் திருக்கோலம் இறைவி கோமதியின் வேண்டுகோளின்படி இறைவன் பூண்டது. சங்கரநாராயணர் திருக்கோலம் உள்ள திருஉருவம் தென் இந்தியாவில் இக்கோயில் ஒன்றுதான். இக்கோயிலில் ஓர் ஸ்படிக லிங்கம் ஒரு அழகிய வெள்ளிப் பேழையில் வைக்கப் பட்டிருக்கிறது. இவருக்கு அன்றாடக அபிஷேகம் உண்டு, சங்கரநாராயணருக்கு அபிஷேகம் கிடையாது.

## மூர்த்திகளின் பெயர், அப்பெயர்களின் காரணம்.

சங்கரலிங்கப்பெருமானுக்கு வன்மீகநாதர் என்ற பெயரும் உண்டு. வன்மீகம் என்பது புற்று. புற்றிலிருந்து தோன்றிய படியால் அவருக்கு வன்மீகநாதர் என்ற பெயர் உண்டாயிற்று. சங்கரநாராயணர் கோமதியம்மையின் காட்சிக்காக வந்த மூர்த்தியாவர். பிறபெயர்கள்:- சங்கர மூர்த்தி, வாராசை நாதன், வைத்தியநாதன், சீராசைநாதன், புன்னைவனநாதன், கூழையாண்டி. கோமதியம்மைக்கு ஆவுடையம்மை என்ற பெயரும் உண்டு. ஆ என்பது பசு, ஆக்களை உடையாள் ஆவுடையாள்; அவளே கோமதியாள்.

கோமதியம்மை சந்நிதி ஈசான திக்கில் ஓர் கம்பீரமான ஷண்முகர் கோயிலிருக்கிறது. கீழ்புறம் நடராஜர் அம்பலம் விளங்குகின்றது.

## தீர்த்தங்கள், குளங்கள், தல மரம், சிறப்புகள்.

இங்கே ஐந்து தீர்த்தங்கள் உள. அவை அக்கினி தீர்த்தம். அகத்திய தீர்த்தம், சூரிய தீர்த்தம், வைரவ தீர்த்தம், கௌரி

தீர்த்தம் என்பன. சங்கரலிங்கத்திற்கு நிருதி திக்கில் சங்கர தீர்த்தம் உள்ளது; அது இந்திர தீர்த்தமென்றும் பெயர் பெறும். சங்கன், பதுமன் என்னும் பாம்பரசர்கள்ால் முழுகப் பெற்றதும், அவர்களால் நன்ருகத் தோண்டப்பெற்றதுமாகிய நாகசுனை, கோவிலுக்குள்ளே நுழையும் இடத்தில் கோமதியம்மை திருமுன்பு அழகானதோர் நடு மண்டபத்தோடு விளங்குகிறது. காற்றைப் புசிக்கின்ற சர்ப்பங்களாலே செய்யப்பட்ட காரணத்தால் இத்தீர்த்தத்தில் நண்டு, ஆமை, தவளை, மீன் முதலிய நீர்வாழுமுயிர்களில்லை. ஊருக்குத் தென்பக்கம் உள்ளது ஆவுடைப் பொய்கை என்பது; இதில் தெப்பத் திருவிழா, தை மாதம் கடைசி வெள்ளிக்கிழமையன்று நடைபெறும்.

இவ்வூரின் தலமரம் புன்னை மரமாகும். இவ்வூர் ஆதியில் புன்னைவனமாக இருந்திருக்கிறது. இம்மரம் மேற்குப் பிரகாரத்தில் உள்ளது.

இந்திரனுக்குத் துன்பம் விளைத்த மாயாசுரனைத் தொலைக்கக் கோமதியம்மையால் ஏவப்பட்ட மாயை வாயு திக்கில் மலையாக இருக்கிறது. அம்மலையின் வடக்கே தண்டத்தால் ஊன்றப் பெற்றுத் தோன்றிய தண்ட தீர்த்தமும், தெற்கில் பசுக்களைக் காப்பாற்ற உண்டாக்கப்பெற்ற தேனு தீர்த்தமும் உள.

இக்கோவிலுக்குச் சொந்தமாக நெடுங்காலமாக ஒரு யானை இருந்துவருகிறது. இப்போதிருக்கும் யானை மிகவும் அழகான கொம்பானை வயது 37. உக்கிர பாண்டியனுடைய பட்டத்து யானை கொம்பினுல் தரையைக்குத்திக் கீழே விழுந்தமைதால் பெருங்கோட்டூர் என்ற ஊருக்கும், சங்கரனுர் கோவிலுக்கும் சங்கரநயினுர் கோவில் என்ற ஊருக்கும் காரணமாக இருந்ததல்லவா!

## ௩. சுற்றுக் கோவில்.

கீழரதவீதியின் கீழ்பக்கமுள்ள அங்கூர விநாயர், தெற்கு ரதவீதியிலுள்ள குலசேகரப் போத்தி, மேலரதவீதித் தவசு மண்டபப் பிள்ளையார், வடக்குரதவீதிப் பிள்ளையார், ஈசானப் போத்தி மண்டபம், அம்மன் முன் தெருவில் தருமர் கோவில், திருவேங்கடம் சாலைக்கு வடக்கில் முப்பிடாரி அம்மன் கோவில், இராசபாளையம் சாலைக்கு மேற்கில் உச்சினிமாகாளி அம்மன் கோவிலும் அம்மைச்சியார் கோவிலும், சோலையங் குளங்கரைத் திருமேனி ஐயனுர், தெற்குக் கோடித்தெருவில் ஆதிசங்கர விநாயகரும், அரசடிப்பிள்ளையாரும், ஓடையில் ஓடைப்பிள்ளையார், களாவடிப் பிள்ளையார், தெருவின் கீழோரம் சங்கரசித்தி விநாயகர், ஊர்க்குளம் கரையில் தலைக்கா உடையார், மலையான் குளம் கரையில் ஆத்தியடிப் பிள்ளையாசர், கழுகுமலைச் சாலைத் தொடக்கத்தில் சுந்தர விநாயகர் இவர்களின் கோவில்கள் சங்கரநயினுர் கோவிலுக்குச் சுற்றுக்கோவில்கள்.

## ௪. சிற்பச் சிறப்புகள்.

### திருவுருவங்கள், தூண்கள், பழைய உருவச்சிலைகள்.

கல்லாலாகிய கோமதியம்மை திருவுருவம் பார்க்கப் பார்க்க உள்ளத்தைக் கவரும் காட்சியதென்று முன் கூறப்பட்டது. கல்லாலாகிய கூத்துடைப் பெருமான் திருவுருவமும், சிவகாமியம்மையார் திருவுருவமும், காரைக்காலம்மையார் திருவுருவமும் அவருடைய அம்பலத்தின்முன் நின்று காண்போர் மனத்தைக் கொள்ளை கொள்ளும் பேரழகுடையன.

பழங்காலப் பாண்டியர்களாற் கட்டப்பட்ட மண்டபங்களும் அவைகளிலுள்ள மன்மதன், இரதி, காப்பறையன் சிலைகளுள்ள தூண்களும் பார்க்கத்தக்கன.

திருநெல்வேலி வடமலையப்ப பிள்ளையனவர்கள் இக் கோவிலிலே, கோமதியம்மை கொடிமர மண்டபம், அம்பலம்,

கோபுரம், களஞ்சியம், மடைப்பள்ளி, மணிமதில் தேர், தேர் மண்டபம், நிருதித் திக்கு மண்டபம், மேலவீதித் திருமடம், பூங்காவனங்களும் தெப்பக்குளமும், மணி மண்டபமும், கைலாய வாகனம், சிங்க வாகனம், பூத வாகனம், அம்மைக்கு அரதன் அங்கி இவை அமைத்ததோடு அறுபத்து மூவரையும் வகுத்தமைத்தனர் என்பது சங்கரலிங்கர் உலா என்ற நூலிலே கூறப்பெறுகிறது. இவர் கொடிமர மண்டபத் தூண்கள் ஒன்றில் கல்லுருவமாக நின்று சங்கரலிங்கரை இன்றும் வணங்கிக் கொண்டிருக்கின்றார்.

## திருப்பணிகள், வர்ண வேலைகள், விமானங்கள்.

சங்கரனார் திருக்கோவில் இன்று நாம் காணும் சிறந்த திருக்கோலத்தை அடையச்செய்தவர் காலஞ்சென்ற தரும கருத்தர் திருவாளர் **N. A. V.** சோமசுந்தரம் பிள்ளை பி. ஏ., பி. எல்., அவர்கள், சங்கரநாராயணர் திரு முன்புள்ள பெரிய மண்டபமும், அம்பலம், நடராசப்பெருமான் திருக்கோவிலும், ஆறுமுகநயினார் கோவிற் கோபுரமும், நாகசுனை முன் மண்டபமும், அங்கூர் விநாயகர் கோவிற் கோபுரமும், மேலை வாசல் முன் மண்டபமும் கட்டியதோடு சங்கரனார் கோவிலின் உட்சுற்றுத் தவிர ஏனைய இடங்களிலெல்லாம் தளவரிசைக் கல் பரப்பியமைத்தார்கள்.

இப்போதுள்ள கோவில் அலுவல் நிலையமும் அவர்களாலேயே கட்டப்பெற்றது. நந்தவனக்கிணறும் பசுக் களுக்கேற்ற தொழுவமும் அமைத்தவர்கள் அவர்களே; நான்கு திருமதில்களிலும் மேற்பூச்சுப் பூசி அவைகளின் நான்கு மூலை களிலும் காவல் உருவங்கள் செய்து வைத்ததோடு சங்கரலிங்கப் பெருமான் திருக்கோவில், கோமதியம்மை திருக்கோவில் முன் மண்டபங்களிலும் சங்கரநாராயணர் கோவிலிலும் அதன் முன் மண்டபத்திலும் அழகான வர்ண வேலைகள் செய்தும் ஓவியங்கள் எழுதியும் வைத்தார்கள். அவர்கள் செய்தனவும் செய்ய எண்ணியனவுமான திருப்பணிகள் அளவில்லாதன.

1915-க்கு முன்வரை சங்கரநாராயணர்கோவில் புதரடர்ந்து சுற்றுக்கோவில்களில் ஒன்றுபோலவே கருதப்பட்டு ஒரு நேரப் பூசை நடந்துவந்தது. அதனைத் சீர் செய்ததுடன் கோவிலின் தலைவாயிலில் இருந்த கல் மண்டபத்தைப் பிரித்து இக்கோவிலின் முன் அழகாக மண்டபம் கட்டி நான்கு வேளை பூசை நடைபெறுமாறு இவர்கள் திட்டம் ஏற்படுத்தினர்கள். மேலும் இச்சந்நிதியை மறைக்கிறதென்று அம்பலம் நடராசர் முன் மண்டபத்தையும் பிரித்து வடக்கே தள்ளிக் கட்டி வைத்தார்கள், 1919-ல் ஆறுமுகர் சந்நிதியும் இவர்களால் ஏற்பட்டது.

1932-ல் நந்தவனக் கிணற்றிலிருந்து குழாய் வழியாகத் தண்ணீர் ஊருக்குள் விழாக்காலங்களிற் கொண்டுவருதல் ஏற்பாடாயிற்று. அப்போது தருமகருத்தர்கள் இலஞ்சி, திரு. இராமசாமிப் பிள்ளையவர்களுடன் மூவர். 1934-ல் மின் விளக்குகள் போடப் பெற்றதோடு சுவாமிகோவிற் கொடிமரம் தங்க முலாம் பூசப்பெற்றுக் குடமுழுக்கு (கும்பாபிடேகம்)-ம் செய்யப்பெற்றது; அப்போது தருமகருத்தர் சேற்றூர் திரு. இராமசுந்தரமகாலிங்கம் பிள்ளையவர்கள்.

பழைய காலத்திலே கோமதியம்மை கோவிலிலே சித்திரச் சாலையொன்று இருந்ததாகவும், அதிற் கோமதியம்மை தவநிலை, சங்கரனர் அம்மைக்கும் சங்கபதுமருக்கும் காட்சியருளிய நிலை, ஊரும் கோவிலும், அகத்திய முனிவருக்கு ஐந்தெழுத்தின் உண்மை நிலை உரைத்தது இவை எழுதப் பெற்றிருந்ததாகவும் சங்கரலிங்கர் உலா விவரிக்கின்றது.

## தேர்கள்.

சங்கரனர் தேர் மிகப் பெரியது; அம்மன் தேர் சற்றுச் சிறியது, இவை சித்திரை விழாவில் ஒன்பதாம் நாளில் இழுக்கப் பெற்றுப் பெரும்பாலும் அன்றே நிலையத்துக்கு வந்துவிடும். ஆடி விழாவில் ஒன்பதாம் நாளிலும் அம்பாள் தேர் இழுக்கப்பெறும்.

# ரு. புராண வரலாறு.

**சங்கரநாராயணர்.**

உமாதேவியார் சிவபெருமானிடத்தில், "விஷ்ணுமூர்த்தியுடன் நீர் பொருந்தியிருக்குந் திருக்கோலத்தைக் காட்டவேண்டும்" என்று விண்ணப்பஞ் செய்தனர். சிவபெருமான் அவ்வேண்டுகோளுக்கிணங்கி அம்மையாரை நோக்கி, "அகத்திய முனிவரிருக்கும் பொதிகை மலைப் பக்கத்தில் புன்னை விருக்ஷ வடிவமாக அநேகர் தவஞ் செய்தனர். அங்கே நீயுஞ் சென்று தவஞ் செய்வாயானால் நீ விரும்பிய திரு உருக்காட்டுவோம்." என்று அருளினர். உடனே அவருடைய திருவடிகளை வணங்கி உமாதேவியார் அவ்விடத்தைவிட்டுப் புறப்படவும் தன்னைப்பணிந்து நின்ற தேவர்கள் தேவியாரை விட்டுப் பிரிய மனமில்லாதவராய் "கூடவருவோம்" எனக் கூற "நீங்கள் புன்னை வனத்திலே வந்து விருக்ஷவடிவாயிருந்து தேன் மிகுந்தலர்ந்த பூவாலும், கனியாலும் சந்தோஷிப்பித்திருங்கள்." தெய்வப் பெண்களே! நீங்களெல்லோரும் ஆ (பசு) வடிவமெடுத்து வந்திருந்து பால் கொடுத்து மகிழ்ச்சியைச் செய்யுங்கள். ஆவாகிய உங்களையுடைய காரணத்தால் எனக்கு ஆவுடையாள் என்ற பெயரை உலகெல்லாஞ் சொல்ல வேண்டும். முனிவர்களே! நீங்கள் ஆதிசைவராகி (பட்டமார்) வந்து நம்மைப் பூசை செய்யுங்கள். புன்னைவனத்திலே எல்லா அம்சங்களும் பிரிவுபடாமல் ஒன்ருகவே நம்முடைய தலைவராகிய சிவபெருமான் எழுந்தருளியிருப்பார்" என்று சொல்லி புன்னைவன க்ஷேத்ரத்தை யடைந்து நெடுங்காலம் தவஞ் செய்தருளினர். சிவபெருமான் புன்னைவனத்திலெழுந்தருளி வந்து ஆடி மாதம் பௌர்ணமியன்று சங்கர நா்ராயணராகிய திருஉருவக் காட்சி கொடுத்தனர். உமாதேவியார் அக்காக்ஷியைக் கண்கள் களிகூறத் தரிசித்துத் தோத்திரஞ் செய்யவும் சிவபெருமான் தேவியாரை நோக்கி உனக்கு வேண்டிய வரங்கேட்பாய்" எனலும் தேவியார் "சுவாமி! இத்திருக்கோலத்தை மறைத்து உம்முடைய திரு

உருக்கொள்ள வேண்டுமென்று பிரார்த்திக்கச் சிவபிரான் சிவலிங்கவடிவாகி அந்த உமாதேவியருடன் புன்னை வனத்திலே எழுந்தருளியிருந்தனர்.

ஆடித்தபசன்று மாலை இறைவன் வீதியில் எழுந்தருளிக் காட்சி கொடுப்பது, தேவியார் விரும்பிய சங்கரநாராயணர் கோலம், இரவு எழுந்தருளிக் காட்சி கொடுப்பது தேவியார் சங்கரநாராயணர் காக்ஷி கண்டபின்பு தாம் வேண்டிய சிவபெருமானின் திருஉருவம். இதுவே ஆடித்தவசு விழாவின் முக்கிய கருத்தும் சிறப்பும்.

" தாதுலாங் குழலரம்பையர் ஆவுருத் தாங்கிப்
போது தோறுமின் பால்பொழிந்துள மகிழ்புரிவீர்
ஆதலா லெமக்கு ஆவுடையா ளெனச் சிறந்த
கோமதிஞம மெவ்வுலகுங் கூறிட வேண்டும் "

(தலபுராணம் ச. நா. சருக்கம் 37.)

இவ்விதமாகச் சிவபெருமான் சங்கரநாராயணராகக் காட்சியருளியதால் நாராயணர், நான்முகன், முதலிய தேவர்கள் யாவரும் சிவனுர் திரு உருவில் அடங்கினவர்களே என்ற உண்மை நிலைபெறுகின்றது. இச்செய்தியை சங்கரநாராயணர் சருக்கத்தில் தென்மொழி வடமொழிப் புராணங்களில் விரிவாகக் காணலாம்.

சங்கன், பதுமன் என்னும் நாகர் இருவர் இருந்தனர். அவர்களில் சங்கன் சிவபெருமானிடத்தும், பதுமன் திருமாலிடத்தும் அன்பு பூண்டு அரன் பெரியவன், அரி பெரியவன் என வாதிட்டுச் சங்கரநாராயணர் காட்சியைக் கண்டு அரனின் கூறுதான் அரியென்ற உண்மையை உணர்ந்தனர்.

" ஐயநின் கூறேமாலும் அயன்முதல் தேவும் என்னும்
மெய் உணர்வே எஞ்ஞான்றும் விளைவுற வேண்டும் "

(தல புராணம் ச. நா. சருக்கம் 68)

ஆடித்தபசு விழா இந்தத் திருநெல்வேலி மாவட்டத்தில் நிகழும் பெருந் திருவிழாக்களில் ஒன்று. தபசு விழா நாளில் இந்த மாவட்டத்திலிருந்தும், பிற மாவட்டங்களிலிருந்தும் திரள் திரளாக மக்கள் கூடி விழாக் காட்சிகளைக் கண்டு களிப்பார்கள். சிறப்பாக இவ்விழாவில் இறைவன் திருவருள் மக்கள் மனதைக் கவர்கின்றது. கோயிலுக்கும் இவ்விழாவன்று ஏராளமான பணம் உண்டியல் மூலமாயும் கிடைக்கின்றது. ஒவ்வொரு வருடமும் உண்டியல் தொகை கூடியே வருவதால் மக்கள் மனதை எவ்வாறு திருவருள் ஆட்கொள்கிறதென்பது தெளிவாகின்றது.

இவ்விசேட காலங்களில் அரசாங்கத்தாரும் மக்கள் யாதொரு அவதியின்றி வழிபாட்டுக்கு வந்துபோக மோட்டார் வசதிகள் சிறப்பாகச் செய்து கொடுப்பார்கள். பிரத்தியேக ரயில் வண்டிகளும் தென்காசிக்கும், விருதுநகருக்குமிடையே இருபக்கமும் ஓடிக்கொண்டிருக்கும்.

**காவற் பறையன்.**

மணிக்கிரீவன் என்ற தேவன் பார்வதிதேவியின் சாபத்தாற் பறையனுகிப் புன்னைவனக்காவலாக இருந்தான், அதனுல் அவன் காப்பறையன் என்றும், காவற்பறையன் என்றும் பெயர்பெற்றுன். கரிவலம்வந்தநல்லூர்ப் பால்வண்ண நாதருக்குப் புன்னைவனத்திலே ஒரு பூந்தோட்டம் இருந்தது. அதற்கும் அவனே காவல். தோட்டத்தின் ஒரு பக்கம் புற்ருென்று வளர்ந்தது, அதை ஒரு நாள் அவன் வெட்ட, அதிலிருந்த பாம்பின் வால் வெட்டப்பட்டது, அப்போது அவன் புற்றின் பக்கத்தில் சிவலிங்கம் இருப்பதையும் கண்டான். அதே சமயத்தில் உக்கிரபாண்டியர் அடுத்த வனத்தில் வந்திருப்பதாக அறிந்து செய்தி தெரிவிக்க ஓடினுன்.

**உக்கிரபாண்டிய அரசர் கோவில்கட்டி ஊர் உண்டாக்கியது.**

திருநெல்வேலிக்கு மேலே பொருநையாற்றின் கரையிலுள்ள மணலூரில் அரசாண்டிருந்த உக்கிரபாண்டியர்

அடிக்கடி மதுரை சென்று மீனாட்சியம்மையையும் சொக்கப் பெருமானையும் வழிபாடு செய்யும் வழக்கமுடையவர். காவற் பறையன் புற்றை வெட்டிச் சிவலிங்கத்தைக் கண்ட அன்று, பாண்டியருடைய யானை கொம்பினால் தரையைக் குத்திக் கீழே விழுந்து புரண்டது. பாண்டியர் ஒன்றும் செய்ய அறியாது திகைத்திருந்தபோதுதான் காவற்பறையன் ஓடிவந்து அரசரிடம் செய்தி தெரிவித்து உடன் வர அழைத்தான். உக்கிரபாண்டியர் சென்று புற்றினையும் புற்றிடங் கொண்டாரையும், கூழைவாலினதாகிய பாம்பினையும்கண்டார், சங்கரனார் அசரீரியாக ஆணைதரப் பாண்டியர் காடு கெடுத்து நாடாக்கிக் கோவில் கட்டிச் சங்கரன்கோவில் ஊரையும் தோற்றுவித்தார். கோவிலில் கோபுரத்தைத் தாண்டியதும் காவற்பறையனுடைய திருவுருவத்தை இப்போது நாம் காணலாம், சங்கரன் கோவிலுள்ளே வலப்பக்கமுள்ள தூணில் உக்கிரபாண்டியரது திருவுருவம் காணப்பெறுகிறது. யானை தனது பெரிய கொம்பினாற் குத்தியமையினாலே அவ்விடத்தில் உண்டாயிருக்கிற ஊர் பெருங்கோட்டூர் என்று பெயர் பெற்றது. (கோடு-கொம்பு). உக்கிரபாண்டியர் கோவிற் பூசைக்கு மிகுந்த நிலங்களைக் கொடுத்து ஒரு சித்திரை மாதத்திலே யானைமேல் ஏறிக்கொண்டு தாம் இறைவனைக் காணக் காரணமாயிருந்த இடமாகிய பெருங்கோட்டூருக்குப் போய் யானை பிடிமண் எடுத்துத் தரக் கொண்டுவந்து பெருந் திருவிழா நடத்தி மகிழ்ந்தார். இத்திருவிளையாடல் இன்றும் நடைபெறுகின்றமை நாம் காணலாம். காவற்பறையனுக்கு ஊரின் தெற்கே ஒரு சிறு கோவில் இருக்கிறது. அது இருக்கும் தெரு காப்பறையன் தெரு என்று இன்றும் வழங்கி வருகிறது. காவற்பறையனுக்கு அன்றாடக பூசை நடந்துவருகிறது. சித்திரை விழா ஆரம்பமாகுமுன் அவருக்குச் சிறப்பு வழிபாடு நடந்த பின்பே கொடியேற்றம் செய்யப்படும்.

**தக்கணை தவம்.**

புலவர் ஒருவர் தம் மனைவி யிருப்பவும் கணிகையரோடு சேர்ந்திருந்து தம் மனைவியை வருந்தச் செய்த பாவத்துடன்

மறு பிறப்பில் தக்கணை யென்ற பெண்ணாய்ப் பிறந்தார். தன் பெட்டையோடு விளையாடியிருந்த ஆண் முயலைக் கொன்ற ஒருவன் அப்பாவத்துடன் சத்தியகீர்த்தியாகப் பிறந்தான். சத்தியகீர்த்தி தக்கணையை மணந்து இருவர் பாவமும் உறுத்திய தால் விரைவில் இறந்தான். விதவையான தக்கணை புன்னை வனத்தில் தவமிருந்து ஏழுபிறவி யெடுத்துக் கடைசியில் சங்கரனார் திருவடியை அடைந்தாள்.

## வீரசேனன் பிணி தீர்தல்.

உரையூர் சோழன் வீரசேனன் தன் மகனுக்கு முடிசூட்டித் தன் பிறவிப்பிணி நீங்கப் புன்னைவனத்தை யடைந்து சிவசன்மன் என்ற பெரியாரை வணங்கி அவரிடம் ஐந்தெழுத்து மந்திரம் கேட்டு அவர் சொல்ல அதன் பெருமையும் உருத்திராக்கத்தின் சிறப்பையும் சிவபூசையின் மேன்மையும் தெரிந்து பிறவிக் கடலுக்கு ஒரு தோணியாகிய சிவபூசையை மேற்கொண்டு சங்கரனார் திருவருளைப் பெற்றனன்.

## சயந்தன் வினை தீர்ந்தது.

தேவேந்திரன் மகனாகிய சயந்தன் காக்கை உருவாகிச் சீதையின் தனத்திலே கொத்தினான். அதனையறிந்த இராமபிரான் ஓர் அம்பை அவன்மேல் ஏவினார். சயந்தன் காக்கை உருவம் நீங்காமல் வாடி, இந்திரனால் ஏவப்பெற்று அவன் தந்த முத்துமாலையைச் சங்கரலிங்கத்துக்குச் சாத்தி, வழிபட்டுத் திருவருளால் முன்னைய உருவம் அடைந்தான்.

## கானவன் வீடு பெற்றது.

எலி பிடிக்கும்போது புதையலெடுத்து அது கொண்டு தீய வழியில் நடந்து ஏழையாகி வேடுவன் ஒருவன் நாகசுனைக்

கரையில் வீழ்ந்து இறந்த புண்ணியத்தினுலே சங்கரனுர் திருவருள் பெற்ருன்.

**கன்மாடன்.**

சேற்றூருக்குப் பக்கத்திலே ஓடும் தேவியாற்றங்கரையிலே தவம் செய்திருந்த சிவராத முனிவர் மகனை கன்மாடன் பசுக் கொலை செய்து சங்கரன்கோவிலுக்கு வந்து நாகசுனையில் மூழ்கி மூன்று நாளில் சங்கரனுர் திருவருளைப் பெற்று நற்கதியடைந்தான்.

**பிறர்.**

பத்திசார முனிவன், இந்திரன், அகத்தியர், வைரவர், சூரியன், அக்கினி ஆகியவர்களும் சங்கரனுரையும் கோமதி யம்மையாரையும் வழிபட்டுத் திருவருள் பெற்றிருக்கின்ருர்கள்.

**பிரகத்துவச பாண்டியன்.**

பிரகத்துவச பாண்டியன் என்பவன் கருவநல்லூரிலே அரசாண்டிருந்த பெரிய அரசன். அவன் பிள்ளைப்பேறில்லாது வாடியமைகண்ட கருவைப்பிரான் " நாம் புன்னைவனத்திலே சங்கரனுர் என்ற பெயரோடு இருக்கின்ருேம். அங்கே உக்கிர பாண்டியன் எமக்குக் கோவில் கட்டி விழாவும் நடத்துகின்ருன். நீயும் அங்கே போய் எமது கோவிலைப் பெரியதாக்கிப் பணிசெய்து வாழ்ந்திரு. உன் எண்ணம் கைகூடும் " என்றருளினன். பிரகத்துவச பாண்டியன் அங்ஙனமே வழிபாடு செய்து திருவருளால் விசயகுஞ்சர பாண்டியனைப் பெற்ருன்.

## இவ்வூரில் வழிபடுவதால் ஏற்படும் நன்மைகள்.

நாகசுனையிலே மூழ்கிச் சங்கரரையும் கோமதியம்மை யையும் வழிபடுவோர் குட்டம், குன்மம் முதலிய தீராத நோய்களெல்லாம் தீர்ந்து நலம் பெறுவர். கோமதியம்மையின் புற்று மண்ணே எல்லாவிதமான நோய்களுக்கும் மருந்தாக

உதவுகின்றது. கடைசி வெள்ளிதோறும் இவ்வூருக்கு மக்கள் ஏராளமாக வந்து வழிபடுகிறார்கள். உயிருக்குரிய பிறவிநோயே நீங்குமென்றால் உடலுக்குரிய நோய்கள் நீங்குமென்பது சொல்லவும் வேண்டுமா?

## திருவிழாக்கள். அருச்சனை, முழுக்கு.

சித்திரைத் திருவிழாவே பெரிய திருவிழா. ஆடித் தவசுக் காட்சி விழாவிலேயும் தை மாதம் கடைசி வெள்ளியன்று ஆவுடைப் பொய்கையில் நடைபெறும் தெப்பத் திருவிழாவிலேயும் பெருங்கூட்டம் கூடும்.

வசந்தவிழா, நவராத்திரிவிழா, திருமணவிழா, கந்தர்சட்டி விழா, மார்கழித் திருவாதிரைவிழா, தைப்பூசவிழா, சமயாசாரியர் விழா, ஆகிய இவைகளும் சிறப்பாக நடைபெறுகின்றன. உத்தராயண தெக்கணயன காலங்களில் சூரியன் தனது சாயைகளுடன் வந்து சங்கரலிங்கப் பெருமானைப் பூசித்ததாகப் புராணம் கூறும். அந்தக்காலங்களில் சூரியபூசை என்ற விழா நடைபெறுகின்றது; இதிலுள்ள சிறப்பு என்னவென்றால் அந்நாட்களில் சூரியன் உதிக்கும் காலத்திலே சூரிய ஒளி சிவலிங்கத்தின் மேலே பொலிவுடன் படுவதை நாம் கண்டு வணங்கலாம்.

இக்கோவில் காமிகாமப்படியமைந்து பூசைகளும் அதன்படி நடந்து வருகின்றன.

ஒவ்வொரு நாளும் திருவனந்தல், விளாபூசை, சிறுகால சந்தி, காலசந்தி, உச்சிக்காலம், சாயரட்சை, அர்த்தசாமம், பள்ளியறை முதலிய பூசைகள் நடக்கும்.

ஆறு காலங்களிலும் திருமுழுக்கு நடைபெறுகிறது. எப்போதும் நூற்றெட்டு (அட்டோத்திரம்) ஆயிரம் (சகசிர நாமம்) முந்நூறு (திருசதை) ஆகிய அர்ச்சனைகளும், சிறப்பாக நவராத்திரி விழாவில் பெருமானுக்குப் பஞ்சமுகார்ச்சனையும்

அம்மைக்கு நவாவரண பூசையும் இலட்சார்ச்சனையும் நடந்து வருகின்றன.

## ௬. சரித்திர வரலாறு.

### கல்வெட்டு.

தச்சநல்லூர் சாமி வேதமூர்த்தி மடாலயத்தில் திருநெல்வேலிச் சில்லாவிலுள்ள சில ஆலயத் திருப்பணிகள் அரசர்கள் காலத்தை விளக்கும் கல்வெட்டு ஒன்று இருக்கிறது. அதன்படி திருவாளர் கு. நல்லபெருமாள் பிள்ளையவர்களால் எழுதப் பெற்றுச் செந்தமிழ்ச் செல்வி பத்தாவது சிலம்பு 500-வது பக்கத்தில் வெளிவந்திருக்கிறது. அதில் நமக்கு வேண்டிய பகுதியை மட்டும் கீழே தருகிறோம்:-

"சாலிவாகன சகாப்தம் 945 (கி. பி. 1022) கொல்லம் 199-ல் மதுரைப்பாண்டியவரசர் சேகரம் உக்கிரபாண்டியவரசர், மானூருக்கு வந்து அதற்குச் சமீபமாய் உக்கிரங் கோட்டையும் போட்டு அரசாண்டார். அக்காலத்தில் சங்கரநயினார் கோவில் ஆலயம் திருப்பணி உண்டானது............ சகாப்தம் 1095 கொல்லம் 349-ல்.........சீவலமாறபாண்டியவரசர் வள்ளியூருக்குவந்து சாமி தெரிசனம் செய்து திருப்பணியும் கட்டி, பிற்பாடு சங்கரநயினார் கோவிலுக்குப் போய், பெரிய பிரகாரம் முதலிய திருப்பணி செய்தார். பிற்பாடு மானூரைப் பிரபலம் பண்ணிவைத்து ஒரு பெரிய குளமும் வெட்டினார். இவர் நாளையில் கரூர்ச் சித்தர் திருநெல்வேலி முதலிய இடங்களைச் சபித்தது."

### உக்கிர பாண்டியர்.

உக்கிரபாண்டிய மன்னர் இற்றைக்குத் தொளாயிரத்து முப்பத்தெட்டு ஆண்டுகளுக்கு முன்னாலே இக்கோவிலைக் கட்டினார் என்பது தெரியவருகிறது. இம்மன்னர் காலத்திலே கருவை நகரில் ஆண்ட பேரரசராகிய பிரகத்துவச பாண்டியரும்

இங்கே பல திருப்பணிகள் செய்தார் என்பதும், அவர் மகன் விசய குஞ்சர பாண்டியர் என்பதும், சங்கரனுர் கோவில் இருக்கும் இடம் கருவை நகர்க் கோவிலுக்கு நந்தவனமாக இருந்ததென்பதும் புராணத்தால் அறியும் வரலாறுகள்.

## சீவலமாறர்.

சீவலமாற பாண்டியரே இத்தலபுராண ஆசிரியர். அவர் இற்றைக்கு எழுநூற்று எண்பத்தேழு (787) ஆண்டுகளுக்கு முன்னர் இருந்தவரென்பதும், அவர் இவ்வூரிற் பலகாலம் தங்கியிருந்தனர் என்பதும் மேலே கண்ட சாசனத்தாலும், அவர் பெயரால் ஊருக்குத் தென்மேற்கே இப்போது உடைகுளமாக உள்ள சீவலப்பேரி என்ற குளத்தினுலும், கிழக்கே இரண்டு மைலுக்குள் உள்ள சீவலராயன் ஏந்தல் என்ற ஊராலும் நிலைநாட்டப்பெறும். இவர் பெயர் கங்கைகொண்டான், மானூர், தென்காசி, சீவலப்பேரி ஆகிய தலங்களிலும் சம்பந்தப்படுகிறது.

## சங்கரநாராயணர் களவு.

இற்றைக்குச் சுமார் இருநூற்று ஐம்பது ஆண்டுகளுக்கு முன் கொல்லம் 877 கி. பி. 1711-ல் திருக்குற்ருலம் வந்திருந்த மதுரை நாயகர் திருமலைநாயக்கரால் பெரியசாமித்தேவர் என்ற செம்புலி சின்னணைஞ்சாத் தேவர் வடகரைப் பட்டம் பெற்று ஆண்டிருந்தபோது அவருக்குத் தானுதிபதியாக இருந்தவர் பொன்னம்பலம் பிள்ளை என்பவர். திருநெல்வேலிச் சில்லாவுக்கு மந்திரி ஆறை அழகப்ப முதலியார். இராமநாதபுரம் சேதுபதி விசயரகுநாதத் தேவர் என்பவர். சங்கரநயினர்கோவிலில் இருந்த சங்கரநாராயணர் எழுந்திருத்து நாயகரை, செண்பகக் கண்ணு பட்டர் என்பவர் திருடிக்கொண்டுபோய்த் திருவுத்தர கோசமங்கையில் அடகு வைத்துவிட்டனர். சேதுபதி அத்திருவுருவை அக்கோவில் மூர்த்திகளுடன் வைத்துப் பூசை புரிய ஆணை தந்தனர். இதனை யறிந்த அழகப்ப முதலியார் அத் திருவுருவை மீட்டுவரும் வல்லமையுடையவர் பொன்னம்பலம்

பிள்ளை ஒருவரே என உணர்ந்து அவரை அழைத்து வேண்டிக் கொண்டனர். இராமநாதபுரம் சென்ற பொன்னம்பலம் பிள்ளை சேதுபதியைப் பார்க்கமுடியாமல் காவடியெடுப்பவர்போலச் சென்று கண்டு கவிபாடினர். அவரை அருட்கவியென உணர்ந்த சேதுபதி மிக்க மரியாதை செய்து சம இருப்புக் கொடுத்துத் தம்முடன் சிலநாள் வைத்திருந்தனர். அப்போது பொன்னம்பலம் பிள்ளை சேதுபதி மன்னனிடம் கிள்ளாக்கை பெற்றுத் திருவுத்தரகோசமங்கை சென்றி சங்கரநாராயணர் திருவுருவைக் கண்டு,

“ புற்றெங்கே? புன்னை வனமெங்கே? பொற்கோயிற்
சுற்றெங்கே? நாக சுனையெங்கே? — இத்தனையும்
சேரத்தா னங்கிருக்கத் தேவநீ தான்தனித்தித்
தூரத்தே வந்ததென்ன சொல். ”

எனப் பாடினர். உடன் அப்பெருமான் தமக்கு மறுமொழி கூறினதாக அவரே பின்வரும் பாடலையும் பாடினர்.

“ விள்ளுவமே சீராசை வீடுவிட்டுக் காடுதனில்
நள்ளிருளில் செண்பகக்கண் நம்பியான் — மெள்ளவே
ஆடெடுக்கும் கள்ளரைப்போல் அஞ்சா
காடுதொறு மேயிழுத்தக் கால்? ” [தெமைக்கரிசற்

இச்செய்தியறிந்த சேதுபதி மகிழ்ந்து சங்கரநாராயணரைச் சங்கரன்கோவிலிற் சேர்த்துவிடுவதாகக் கூறிப் பொன்னம்பலம் பிள்ளைக்கு வேண்டும் வரிசைகள் வழங்கி அத்திருவுருவத்தையும் அனுப்பியுதவினர்.

### கோமதியம்மை திருமுன்பு சக்கரம்.

இற்றைக்கு ஒரு நூற்று எழுபத்தொன்பது ஆண்டுகளுக்கு முன்னர் கி. பி. 1781-ல் இறைவர் திருவடியடைந்த பெரியாராகிய மாபாடியம் சிவஞான முனிவர் சிறு பிள்ளையாக இருக்கும்போது திருவாவடுதுறையிற் பத்தாவது குருமூர்த்த

மாக எழுந்தருளியிருந்தவர் வேலப்பதேசிகராவர். அவர் இறைவர் திருவடிக்கு மெய்யன்பராதலினாலே அவரிடம் குட்டம், குன்மம் முதலிய நீங்கா நோய்களையும் போக்கும் அருட்சக்தி பதிந்து விளங்கியது. அவர் சங்கரன்கோவிலுக்கு வந்து மேலை வீதியிலுள்ள தமது திருமடத்தில் எழுந்தருளி யிருந்தமையை அறிந்த நெற்கட்டுஞ்செவலின் குறுநில மன்னராகிய சிவஞான பூலித்தேவர் குருமூர்த்தியைக் கண்டு பணிந்து அவர் திருவருளால் தமக்கிருந்த குன்மநோய் நீங்கப் பெற்று ஞானதேசிகருக்கு விளைநிலம் முதலானவை சிவ பூசை, குரு பூசை, மாகேசுர பூசையின் பொருட்டுச் சாசனம் செய்து கொடுத்தார்.

வேலப்ப தேசிக மூர்த்திகள் கோமதியம்மையின் திருமுன்பு ஒரு மந்திரச் சக்கரத்தைப் பதித்தருளினார். அச்சக்கரத்துக்குக் கோமதியம்மை தந்தருளிய வல்லமையினாலே இன்னும் அதனருகில் வரும் ஆடாத பேயும் ஆடுகின்றது. தீராத நோயும் தீர்ந்து போகின்றது. இந்தத் தேசிக மூர்த்திகள் சங்கரன் கோவிலிலே வழிபாடியற்றி இருக்கும்போது ஒரு புரட்டாசிமாத மூல நாளிலே சங்கரனார் திருவடியிணைமலர் சேர்ந்து பேரின்பம் எய்தினர்.

## கல்வெட்டுக்கள்.

1473—74-ல் பட்டம் பெற்ற பராக்கிரம பாண்டியனாருடைய கல்வெட்டு சங்கரநயினார்கோவிலில் 1506–07-ல் எழுதப்பெற்றிருக்கிறது. அதில் அவருடைய ஆளுகையின் 33-வது ஆண்டென்பது தெரிகிறது. 1915 வரையுள்ள கல்வெட்டுக்களை ஒழுங்குபடுத்தி வெளியிட்டுள்ள அரங்காச்சாரியார் நூலின் பகுதி 3 பக்கம் 1475—1476-ல் பின்வரும் விவரங்கள் காணப்பெறுகின்றன:—

302. சங்கரலிங்கசாமி கோவிலிலுள்ள கோமதியம்மன் கோவில் வடக்குச் சுவரில் திரிபுவனச் சக்கரவர்த்தி கோனேரி

மெய்கொண்டான் குலசேகர தேவன் என்ற பாண்டியன் சடில வர்மன் தன் மூன்ருவது ஆண்டில் பிரமாதி சகம் 1475-ல் பதித்த கல்வெட்டு இதில் ஆரியநாடு குறிக்கப்பெறுகிறது; (1908-ல் எடுத்த 281-வது கல்வெட்டு).

303, கோவிலின் முன்புள்ள ஒரு கல்லில் கலி 4962, சகம் 1783 கொல்லம் 1036-ல் துர்மதியில் ஒரு தாசில்தார் கொடுத்தது. குறிக்கப்படுகிறது. (1908—282).

304. பெரிய கோபுரத்துள் நுழையும்போது வலதுபுறம் உள்ள கல்வெட்டு விசுவாவசு ஆண்டு வைகாசி 24உ திங்களன்று எழுதப்பெற்றது. திருவிழா சாவுகாலங்களில் நான்கு கீழ்வகுப்பு மக்களின் சிறப்புரிமைகள் குறிப்பிடுகிறது. (1914—432).

பின்வரும் பதிஞென்றும் மக்கென்சி துரை பதித்த நூலில் உள்ளன என அரங்காச்சாரியார் குறிப்பிடுகிருர்:—

1. சங்கரநயிஞர்கோவிலின் தெற்குப் பக்கத்திலுள்ள கல்மேல் பராக்கிரமபாண்டியன் சகம் 1428-ல் கொடுத்த நிலக்கொடை குறிக்கப்படுகிறது.

2. அர்த்த மண்டபத்தின் தென்பக்கம் கைலாசநாத பட்டருக்கு பராக்கிரமபாண்டியன் தனது ஆட்சி இரண்டாம் ஆண்டில் நாடோறும் உணவுக்காக இரண்டு மாநிலமும் ஒரு வீடும் கொடுத்தது குறிக்கப்பெறுகிறது.

3. சுற்றியுள்ள சுவரில் ஒரு கல்லில் பிலவங்க ஆண்டில் பராக்கிரம பாண்டியனுடைய நிலக்கொடை தெரிகிறது.

4. வடக்குச் சுவரில் ஒரு கல்லில் பராக்கிரமபாண்டியன் தனது ஆட்சி இரண்டாம் ஆண்டாகிய சகம் 1413-ல் சதாசிவ பட்டரென்ற பிராமணருக்கு நிலக்கொடை கொடுத்தது தெரிகிறது.

5. கோபுரத்தின் தெற்குச் சுவரில் சிதைந்துள்ள கல்வெட்டு சர்வசித்து சகம் 1510-ல் அவனது ஆட்சி 26-வது ஆண்டில் எழுதியது, (அரசன் அதிவீரராமபாண்டியன் கி. பி. 1562-1605 வரை ஆண்டவன்.)

6. ஆவுடையம்மன் கோவிலின் வடபக்கமுள்ள ஒரு கல்வெட்டில் குலசேகரன் சகம் 1475 ஆகிய தனது ஆட்சி மூன்றும் ஆண்டில் கோட்டூர் என்னும் ஊரை அம்மைக்குக் கொடுத்தது.

7. அதே இடத்தில் சிதைந்த கல்வெட்டு சகம் 1484-ல் அதே அரசனது பதின்மூன்ருவது ஆட்சி ஆண்டில்.

8. அம்மை கோவில் வடபக்கமுள்ள கல்லொன்றில் சிதைந்த கல்வெட்டு விக்கிரமதேவனுடைய ஆருவது ஆண்டு.

9. அதே இடத்தில் தனது ஆட்சி பதிஞருவது ஆண்டில் சகம் 1479-ல் பராக்கிரமபாண்டியன் ஊரைக் கொடுத்தது.

10. கோவிலின் தெற்கு வாயிலில் விக்கிரமதேவ பாண்டியன் தனது ஆட்சி ஆருவது ஆண்டில் கோவில் தானீகர்களுக்கு நிலக்கொடையளித்தது.

11. அதே இடத்தில் வடபக்கமுள்ள கல் ஒன்றில் அம்மைக்கும் அப்பனுக்கும் திரிபுவனச் சக்கரவர்த்தியின் நிலக்கொடை குறிப்பிடப் பெறுகின்றது.

## எ. வரவு செலவு.

**சொத்து விபரம்,**

சங்கரன்கோவில் தாலூகாவில் வாசுதேவநல்லூர், காரணபுரம் என்ற ஊர்களில் ஆண்டுதோறும் 317 கோட்டை நெல்லும் ரூபாய் 5,900 வரக்கூடிய நஞ்சை நிலங்களும் அம்பாசமுத்திரம் தாலூகாவில் பிரான்சேரி கோபால

சமுத்திரம், சொக்கலிங்கபுரம் என்ற ஊர்களில் ஆண்டுதோறும் 515 கோட்டை நெல் வருமானமுள்ள நிலங்களும் உள.

நல்ல வாடகை வரக்கூடிய பல கட்டிடங்களும் இருக்கின்றன. பட்டர்களுக்கும், பரிசாரகருக்கும், மேளத்துக்கும் மானியங்களாக இறும் நிலங்கள் உண்டு. நகைகள் ஓரிலக்கம் ரூபாய்க்குமேல் பெறுவன. முக்கியமானவை: கோமதித்தாயின் தங்கப் பாவாடை, திருமார்பு அங்கி, திருக்கை, பாதம், ஷண்முகர், சங்கரநாராயணர் வெள்ளிப் பிரவைகள்.

வெள்ளி வாகனங்கள்:- ரிஷபம், மயில், யானை, ஸிம்மம், காமதேனு, பூதம், புருஷா மிருகம், கிளி, அன்னம், பிரதோஷ வாகனம், சப்பரம், பெருச்சாளி வாகனம் முதலியன.

**காணிக்கை.**

தங்கம், வெள்ளி, பித்தளை, வெண்கலச்சாமான்கள், துணி, ஆடு, மாடு, கோழி, உப்பு, மிளகாய், மிளகு, காய்கறிகள், பலவகைத் தானியங்கள் காணிக்கையாக வருகின்றன. இவை ஏலம் போடப்படும். உண்டியலில் ரொக்கப்பணமும் சாமான்களும் வரும்.

**பிற வரவு.**

அரசர் கொடை (தஃச்திக்கு ஆகிய வருவாயுடன்) பொங்கல் முதலியன, அருச்சனை, பன்னீர், முடியிறக்குதல் இவைகளின் ஏல விற்பனை வருவாயும் உண்டு,

**சென்ற 1369-ம் பசலி வரவும் செலவும் பின்வருவன:**

| நிர். | வரவு. | | தொகை ரூ. |
|---|---|---|---|
| 1. | நிலவருமானம் | ... | 60,458 |
| 2. | கட்டிடம் | ... | 7,926 |
| 3. | உண்டியல் | ... | 48,410 |
| 4. | காணிக்கை, உபயம் | ... | 11,404 |

| | | | |
|---|---|---|---|
| 5. | வட்டி | ... | 20,988 |
| 6. | அரசர் நன்கொடை | ... | 5,225 |
| 7. | அர்ச்சனை | ... | 3,359 |
| 8. | திருமணக் காணிக்கை வசூல் | ... | 1,164 |
| 9. | டிக்கிரி வசூல் | .... | 3,000 |
| 10. | சர்க்கார் மானிபம் | ... | 665 |
| 11. | பிற வகைகள் | .... | 2,082 |
| | | மொத்தம் | 1,64,681 |

**செலவு.** ரூ.

| | | |
|---|---|---|
| பணியாட்கள் | .... | 23,088 |
| பூசை | ... | 21,100 |
| திருவிழா கட்டளை | ... | 20,600 |
| மின்சாரம் | ... | 6,800 |
| நிலங்கள், கட்டிடங்கள் | ... | 3,300 |
| பிரயாணச் செலவு | ... | 1,032 |
| இறைவரி | ... | 3,900 |
| பஞ்சாயத்து வரி | ... | 540 |
| வாகனாதி, கால்நடை பராமரிப்பு செலவுகள் | | 5,880 |
| கல்வி சுகாதாரம் | ... | 4,100 |
| வழக்கு | ... | 630 |
| பன்னீர் | ... | 1,075 |
| வட்டி | ... | 1,800 |
| ஆடிட்பீஸ், கான்டிரிபூஷன் | ... | 11,600 |
| புதுக்கட்டிடம், கிணறுகள் | ... | 11,750 |
| நானாவிதம் | ... | 2,500 |
| | மொத்தம் | 1,19,695 |

## 30—6—60-ல் பொருள் நிலை.

### இருப்பு.

| | | ரூ. |
|---|---|---|
| 1. | கையிருப்பு | 14 |
| 2. | பாங்குகளிலிருப்பது | 9,265 |
| 3. | அரசினர் பத்திரங்கள் ... | 1,81,500 |
| 4. | அஞ்சல் நிலைய தேசீய காப்பு பத்திரங்கள் | 55,000 |
| 5. | பணியாள் காப்பு நிதி ... | 2,285 |
| 6. | மின்சார காப்பு நிதி ... | 1,240 |
| 7. | காலதவணை சேமிப்பு ... | 1,39,985 |
| | மொத்தம் | 3,89,289 |

### அருச்சனை முதலியவைகட்குரிய கட்டணங்கள்.

108 (அட்டோத்திரம்), 300 (திரிசதை), 1,000 (சகசிரநாமம்) என்ற மூன்று அருச்சனைகளுக்கும் முறையே **12, 21, 75** நயேபைஸே கட்டணங்கள் உண்டு. இப்பணம் மூன்று சரிபங்காகக் கோவில், பட்டர், அருச்சகருக்குள் உரிமையாகிறது. பிறந்த முடியெடுப்புக் கட்டணம் தலைக்கு 75 நயேபைஸே. கோயிலில் திருமணம் செய்யக் கோயிலுக்குக் கட்டவேண்டியது ரூ. 4-00, சுதந்திரப் பணம் ரூ. 5/- ஆக ரூபாய் ஒன்பது. ஹரிசனங்கள் சுதந்திரப் பணம் மட்டும் கட்டவேண்டும். கோயிலுக்குக் கட்டவேண்டியதொன்றுமில்லை.

## கட்டளைகள்.

1. **புளியம்பட்டி:—** விளா பூசை - இனும்சாசனம் 195- நஞ்சை 34 ஏ. 41 செ. புஞ்சை 149-93, புறம்போக்கு 63-2, கட்டளைக்காரர் சங்கரன்கோவில் திரு. **S. V.** பழனியப்ப முதலியார், திரு. **S. D.** சண்முக முதலியார்.

2. **தளவாய்புரம்:—** விளாபூசை - இறும் சாசனம் 201, நஞ்சை 44-52, புஞ்சை 597-74, புறம்போக்கு 90-28, கட்டளைக்காரர் திருநெல்வேலி திரு. மேடை தளவாய் தி. அரங்கநாத முதலியார் வகையரா.

3. **குன்றங்குளம்:—** சிறு காலசந்தி 199-நஞ்சை 19-45, புஞ்சை 167-59, புறம்போக்கு 26-53, பணகுடி திரு. செல்வ சுப்பிரமணிய பிள்ளை மானிபம் வாபஸ் நடபடிக்கை நடந்து கொண்டிருக்கிறது.

4. **ஈழத்துராயனேந்தல்: —** சிறுகாலசந்தி-204-நஞ்சை 12-80, புஞ்சை 159-64, புறம்போக்கு 32-27 இராசபாளையம் பண்ணையார் திரு. இராவ்பகதூர் இராமசுந்தரம் பிள்ளை.

5. **பாறைக்குளம்:—** காலசந்தி 208 ந. 25-40, பு. 108.6 புறம். 52-37 சங்கரன்கோவில் திரு. P. இராமையர் வகையரா.

6. **கும்மட்டிக்குளம்:—** காலசந்தி 87 ந. 31-96. பு. 42-59, புறம். 52-10, சங்கரன்கோவில் திரு. P. இராமையர் வகையரா.

7. **வேப்பன்குளம்:—** காலசந்தி 210 ந. 49-0, பு. 1079 18. புறம் 69-48. பிள்ளையன் கட்டளை நிர்வாக அதிகாரி.

**ஆலங்குளம்:—** (தலைவன்கோட்டை ஜெமீன்) காலசந்தி 156-ந. 82-82, பு. 515-52, புறம். 109-35. அரசினரால் எடுக்கப்பட்டு கோயிலுக்கு ரொக்க மானிபம் வருஷா வருஷம் கொடுக்கப்படுகிறது.

**ஆவுடையாள்புரம்:—** (கம்பனேரி புதுக்குடி மிட்டா) காலசந்தி 226/3 ந. 73-93, பு. 498-40, இவை மூன்றுக்கும் திருநெல்வேலி திருவாளர்கள் காந்திமதியம்மாள், மீனாட்சியம்மாள். T. முத்தைய பிள்ளையன், T. S. நெல்லையப்ப

பிள்ளையன், **A.** சங்கரநாராயண பிள்ளையன், **N.** சங்கர நாராயண பிள்ளையன்.

8. **குடைமானியம் கால்புரவு:—** காலசந்தி 190 ந. 11-18 பு. 37-36, புளியங்குடி திரு. விநாயகத்தம்மாள் வகையரா.

9. **தளவாய்புரம்:—** உச்சிக்காலம் 202 ந. 2-18, நடுவக்குறிச்சி திரு. சுப்பிரமணிய பாண்டியத் தலைவர்.

10. **முறிப்பன்குளம்:—** உச்சிக்காலம் 208- ந. 17-79, பு. 180-23, புறம். 33-96, களப்பாகுளம், முறிப்பன்குளம் திரு. சித்திரபுத்திரஐயாத் தலைவர் வகையரா.

11. **கற்குடி:—** (திருவாங்கூர்) காலசந்தி - பட்டா 503, ந. 6-46, செங்கோட்டை திரு. அனந்தநாராயண ஐயர் வகையரா.

12. **ஆய்க்குடி:—** (திருவாங்கூர்) ஆட்டைச் சிறப்பு-பட்டா 70-பு. 254-0 இலஞ்சி திரு. இராவ் பகதூர் இ. சி. ஈசுவரன் பிள்ளை, திருமகள் செல்வி அறம்வளர்த்தம்மாள்.

13. **கீழ ஆலங்குளம்:—** சாயரட்சைத் திருவாச்சித் திடவிளக்கு 207 - ந. 11-19, பு. 175-12, புறம். 59-73, திரு, சிவசங்கரன் பிள்ளை வகையரா. மேல்வாரம் ரூ. 110 கோயிலுக்குக் கொடுக்கப்படுகிறது.

14. **இலத்தூர்:—** (திருவாங்கூர்) வெள்ளிக்கிழமைக் கட்டளை ந. 5-6, புறம். 0-2, பத்தொன்பது பேரிடம் பிரிந்து இருக்கிறது.

15. **ஆய்க்குடி:—** (திருவாங்கூர்) காலசந்தி - பட்டா 62 - ந. 0-98½. ஆய்க்குடி திரு. கிருஷ்ணம்மாள் வகையரா (திருவாங்கூர்ச் சீமையின் இந்த மூன்று ஊர்களிலுள்ள சொத்துக்களைப்பற்றி அறநிலையக் காப்புக் கழகத்துக்கு எழுதி

அனுமதிபெற்று, திருவாங்கூர் செங்கோட்டைத் தாலுகா தேவசம் ரெவினியூ அதிகாரிகள் வழி இப்போது அனுபவிப்பவர்களுக்கு அறிவிப்புக் கொடுத்தபின்பு சென்ற பதினேழு ஆண்டுப் பாக்கிகளில் சில மட்டும் சென்ற இரண்டு வருடங்களாக வசூலாகியிருக்கின்றன, இலத்தூரிலிருந்து ரூ. 279–6–4 + களாங்காட்டிலிருந்து ரூ. 64—8—8.)

*16.* **களாங்காடு:—** அர்த்தசாமக் கட்டளை வருஷ வருமானம் 45 கோட்டை நெல்.

*17.* **கம்மட்டிக்கோனேந்தல்:–** விழாபூசை 75-ந. 33-48 பு. 322-80, புறம். 48-49, சங்கரன்கோவில் திரு. S. V. பழனியப்ப முதலியார், இராமனுதபுரம் திரு. சோணமுத்துக் கோனுர், (திரு. சோணமுத்துக் கோனுர் நீதிமன்றமூலம் ஏலத்தில் எடுத்தவர்.)

*18.* **வடக்கு இலவன்குளம்:—** விழாபூசை 76 - ந. 28-12, பு. 386-78, புறம். 69-84, சங்கரன்கோவில் திரு. K. K. பிச்சுமணி ஐயங்கார் (நீதிமன்றத்தில் ஏலம் எடுத்தவர்.) இது அரசினரால் எடுக்கப்பட்டு ரூ. 300 /- வருடா வருடம் ஹஸ்தாரால் செலுத்தப்படுகிறது.

*19.* **இடையன்குளம்:-** அர்த்தயாமம் 205 - ந. 7 - 2, பு. 64-43. புறம். 25-12, சங்கரன்கோவில் திரு. அழகர்ராசா, நல்லையராசா (கிரையம் வாங்கியவர்.)

*20.* **கல்லத்திகுளம்:—** காலசந்தி - 197 - ந. 20 -55 பு. 103-20, புறம், 50-25, சங்கரன்கோவில் திரு. இலட்சுமி நாராயண ஐயர் (கானுகோ கோனேரி ராவ் வகையராவிடமிருந்து ஒத்தியாகப் பெற்றிருக்கிருர்.)

*21.* **மேல இலவங்குளம்:—** காலசந்தி - 200 - ந. 21-4, பு. 164-84. புறம், 31-65, சங்கரன்கோவில் திரு. இராமசாமி ஐயர் (பல பங்காளிகளிடமிருந்து வாங்கியிருக்கிருர்.)

## III. கட்டளை நடைபெறுமல் இருந்து நடபடிக்கை நடந்து கொண்டிருப்பவை,

1. **ஒப்பனையாள்புரம்:—** காலசந்தி - 60 - ந. 2-0, அளகாபுரி ஜமீன்தார்.

2. **ஆட்கொண்டார்குளம்:-** காலசந்தி - 213 - ந. 83 - 66, பு. 546-33, புறம், 127 - 74, மத்தளம்பாறை திரு. ஸ்ரீராமக் குமாரசாமி பிள்ளை.

3. **வாடிக்கோட்டை:-** பூமாலை - 66 - பு. 18 - 20, அளகாபுரி ஜமீன்தார்.

4. **பிள்ளையார்நத்தம்:—** காலசந்தி - 177 - பு. 23-74 சங்கரன்கோவில் திரு. நாகசாமி பட்டர்.

5. **களாங்காடு:—** (திருவாங்கூர்) அர்த்தயாமம் - பட்டா 700 - ந. 24-57, பு. 4-28, பட்டா 16-ல் மரம் ஆறு - இருபத்து நான்கு பட்டாதார்களிடம் இருந்து வருகிறது. வியாச்சியம் செய்து கோயிலுக்கு அனுகூலமாகத் தீர்ப்பாயிருக்கிறது.

6. **சங்கனுப்பேரி:—** காலசந்தி ரொக்க மானிபம் ரூ 88—14—5 அரசாங்கம் தருவது.

7. (நொச்சிகுளம் மிட்டா) **ஆலங்குளம்:—** அர்த்த யாமம் 130-நஞ்சையும் புஞ்சையும் 384 - 29 கோவிலுக்கு மேல்வாரம் மட்டும் தீர்ப்பாகி இருக்கிறது.

## IV. நடைபடிக்கையின்மேல் கட்டளைக்காரரிடமிருந்து சட்டப்படி கோவிலின் ஆளுகைக்கு வந்திருப்பவை நான்கு. அவை:-

1. **இருமன்குளம்:—** காலசந்தி - 221 ந. 55-7, பு. 300-47, குடிவாரமும் மேல்வாரமும் தீர்ப்பாகிக் கோவில்

ஆளுகையில் இருக்கிறது. (சர்க்காரால் எடுத்துக்கொள்ளப் பட்டது.)

2. **செந்தட்டிக்காளையார்குளம்:-** காலசந்தி - 203 - ந. 48-14 பு. 587-35. புறம். 79-19 மேல்வாரம் மட்டும் தீர்ப்பாகிக் கோவில் ஆளுகையில் இருந்துவருகிறது. ஆண்டு தோறும் அரசாங்கம் இந்நிலங்களுக்காக தீர்வை ரூ. 249-6-0 கோவிலுக்கு தருகிறது.

3. **குருக்கால் புரவு:-** (குருக்கள் கால்புரவு) காலசந்தி 211 - 17 - 62 புறம். 13-39 சென்னை உயர்நீதி மன்றத்தில் குடிவாரமும் மேல்வாரமும் கோவிலுக்கு என்று தீர்ப்பாகி மற்ற நடைபடிக்கை நடந்துவருகிறது. கோயில் பொதுச் சொத்துடன் சேர்க்கப்பட்டிருக்கிறது.

4. **சீவலராயன் ஏந்தல்:—** அர்த்தயாமம் 206 ந. 39-30 பு, 578-40 புறம் 57-94. தற்சமயம் சில்லாக் கலெக்டரால் கோவிலுக்கு மேல்வாரமும் குடிவாரமும் தீர்ப்பாகியிருக்கிறது.

## கோவிலுக்கு இருக்கிற நிலச் சொத்துக்கள்.

**நஞ்சைகள்** பின் வருவன ஏக்கர், செண்டு:—

வாசுதேவநல்லூர் 70-4, நாராயணபுரம் 60-88, பெருங் கோட்டூர் 0.48, சங்கரன்கோவில் 1-89, பிரான்சேரி 32-90 கோபாலசமுத்திரம் 12-78, ஷை இனும் நஞ்சை 3-49, சொக்கலிங்கபுரம் 15-50, இனும் ஆயக்கோனேந்தல் 12-54, இனும் நெடுங்குளம் 45-70, இனும் அதிகாரி பெட்டைக்குளம் 15-49, இனும் வெள்ளந்தாங்கி 9-71.

**புஞ்சைகள்** பின்வருவன:—

சங்கரன்கோவில் 3-26, பிரான்சேரி 95-84, கோபால சமுத்திரம் 7-18, மேலச்செவல் 2-31.

## அ. கோயில் ஆட்சி.

இக்கோயில் சென்னை 22/1959 ஹிந்து அறநிலையப் பாதுகாப்புச் சட்டத்தின்படி ஆட்சிமுறை நடந்து வருகின்றது.

அறநிலையப் பாதுகாவற் கழகம் 5—8—1944-ல் எண் 3189 ஏ. உடைய திட்டத்தை (Scheme) அமைத்திருக்கிறது. அதன்படி நிர்வாக அதிகாரி (Executive Officer) நியமிக்கப் படுகிறார். நிர்வாக அதிகாரி இப்போது அரசினர் அலுவலராக ஆக்கப்பட்டிருக்கிறார். (Government Servant). ஐந்து தருமகருத்தர்கள் உள்ள ஓர் குழு நியமிக்கப்படுகின்றது. இக்குழு தங்களில் ஒருவரைத் தலைவராகத் தேர்தல் செய்து கொள்ளவேண்டும்.

## கூ. இலக்கியம்.

இவ்வூர்த் **த ல பு ரா ண ம் சீவலமாறபாண்டிய மன்னவரால்** அருளிச் செய்யப்பெற்றது. முதலாறு சருக்கங்கள் ஊற்றுமலைச் சமஸ்தான வித்துவான் புளியங்குடி **முத்துவீரப்பக் கவிராயரால்** கி. பி. 1913-ல் இயற்றப் பெற்றவை. இப்புராணத்துக்கு அரும்பதவுரையும் சுருக்கமும் எழுதியவர் சேற்றூர் மு. ரா. அருணாசலக் கவிராயராவர். மதுரை நீ. இராமலிங்கம் பிள்ளை யென்பார் "சங்கரநயினார் கோவில் கோமதியம்மன் தவமகிமை அம்மானை" என ஓர் நூல் இயற்றியிருக்கின்றார். பூகைலாய மான்மியம் என்கிற சங்கரநாராயணக் க்ஷேத்ர மான்மியம்" என்ற வடமொழி நூல் தமிழ் மொழிபெயர்ப்புடன் 1919-ல் அச்சிடப் பெற்றிருக்கின்றது.

சங்கரநயினார்கோவில் சங்கரலிங்கர் உலா, சங்கரநயினார் கோவில் அந்தாதி, சங்கரலிங்கர் சதகம், கோமதியம்மை பிள்ளைத் தமிழ், சங்கர சதாசிவமாலை சங்கரநயினார்கோயில் கோமதியம்மை தலமகிமை அம்மானை முதலிய பல நூல்கள்

விளங்குகின்றன. முத்துவீரப்பக் கவிராயராலே பிள்ளைத் தமிழ் பாடப்பெற்றது.

## நூல் நிலையம்.

சரஸ்வதி மஹால் என்ற நூல் நிலையம் 27-7-1941-ல் அறநிலையப் பாதுகாப்புக் கழக ஆணையாளர் இராவ்பகதூர் கோ. ம. இராமச்சந்திரன் செட்டியார் பி. ஏ., பி. எல்., அவர்களால் திறந்துவைக்கப்பெற்று ஒழுங்காக நடைபெற்று வருகிறது. நிலையத்திலிருக்கும் புத்தகங்களின் எண் 1094.

## சமுதாயப்பணி.

இக்கோயில் ஹிந்து மாணவர் 50 ஏழைகளுக்கு பள்ளி உள்ள நாட்களில் அன்றாடகம் பகலுணவு அளித்து வருகின்றது. விடுமுறை காலங்களில் இவ்வுணவு அளிக்கப்படாது. மாணவர் உணவு கொள்ளுமுன் திருநீறு பூசித் திருமுறை ஓதி உணவுகொள்வார்கள்.

கோவில் விசேடங்களைக் காட்டக்கூடிய ஒரு நாட் குறிப்பு வெளியிடப்படுகின்றது.

## தேவார பாடசாலை.

நூல் நிலையம் புத்துயிர் பெறுவதற்குக் காரணராகிய தருமகர்த்தர் திருவாளர் தி. இரா. கோமதிநாயகம் பிள்ளை அவர்கள் 13-6-1941-ல் சென்னை மாகாணத் தமிழ்ச் சங்க அமைச்சராகிய திருவாளர் இ. மு. சுப்பிரமணிய பிள்ளையவர்களால் திறக்கச் செய்து ஒரு தேவார பாடசாலையை நிறுவியிருக்கின்றார்கள். அதன் ஆசிரியராயிருப்பவர் திருவாளர் திருஞானசம்பந்த ஓதுவாரவர்கள். இப்பாடசாலை செவ்வனே நடைபெற்றுவருகிறது. இருபது பெண் குழந்தைகள் படித்து வருகின்றனர்.

## வார வழிபாடு.

ஒவ்வொரு ஞாயிறன்றும் மாலை வார வழிபாடு நடக்கும். திருமுறை ஓதப்பெறும். அறிஞர்களை வரவழைத்து

சொற்பொழிவுகள் நிகழ்த்தப்படுவதுடன் வழிபாடு முடிவுறும். மாணவ மாணவிகள் முதியோர் இவ்வழிபாட்டில் பங்கு கொள்ளுவர்.

## சங்கரன் என்ற திருப்பெயர்.

சங்கரன் என்ற திருப்பெயர் இவ்வூர்ப் பெருமானுக்கே உரியதாக இருக்கிறது. இப்பெயர்கொண்டு இக்கோவிலும், ஊரும் தாலூகாவும் வழங்கப் பெறுகின்றன. சமயாசிரியர் களும் பிற பெரியார்களும் துன்ப நீக்கமும் பேரின்பப்பேறும் கருதி மனம் உருகிப்பாடுகின்ற போதெல்லாம் **சங்கரன்** என்ற பெயரையே கூறிப் பெருமானை அழைக்கின்றனர். எடுத்துக் காட்டாகச் சில கூறுவோம்.

நாமார்க்குங் குடியல்லோம் நமனையஞ்சோம்
நரகத்தில் இடர்ப்படோம் நடலையில்லோம்
ஏமாப்போம் பிணியறியோம் பணிவோம் அல்லோம்
இன்பமே எந்நாளுந் துன்பம் இல்லை
தாமார்க்குங் குடியல்லாத் தன்மையான **சங்கரன்** நற்
சங்கவெண் குழையோர் காதிற்
கோமாற்கே நாம் என்றும் மீளா ஆளாய்க்
கொய்மலர்ச் சேவடியிணையே குறுகினேமே.

— திருநாவுக்கரசர்

தந்ததுன் தன்னைக் கொண்டதென் தன்னைச்
**சங்கரா** ஆர்கொலோ சதுரர்
அந்தமொன்றில்லா ஆனந்தம் பெற்றேன்
யாதுநீ பெற்றதொன் றென்பால்
சிந்தையே கோயில் கொண்டஎம் பெருமான்
திருப்பெருந் துறையுறை சிவனே
எந்தையே ஈசா உடலிடங் கொண்டாய்
யான் இதற்கிலன் ஓர்கைம் மாறே.

— மாணிக்கவாசக சுவாமிகள்.

# மாதிரிப் பாடல்கள்.

## சங்கர சதாசிவ மாலை.

அன்னையுமை கௌரி ஆவுடையு நீயுமிந்தப்
புன்னைவன மேவினதென் பூசாபலந்தானே
நின்னைப் பொருளெனவே நீங்கா துணர்ந்திருந்து
தன்னை யறிவதென்றே சங்கர சதாசிவமே.

*பின் வருவது சங்கரலிங்கர் உலாவிலுள்ளது:—*

## சித்திரச்சாலைக் காட்சி.

" நீடுபுன்னைக்
காவை நேசித்து வந்து கண்ணுதலை ஆவுடைய
பாவைபூ சித்த படிபாரீர் — பாவைதனக்
கன்று வடிவமிரண்டாக இறைவனென்றாய்
நின்ற கருணை நிலைபாரீர் — சென்றுதொழ
இவ்வுலகில் சங்கபற்பர் என்னும் அரவரசர்க்
கவ்வுருவந் தந்த அருள்பாரீர் — செவ்வேல்
அரசன் வழுதிபுரி ஆலயமும் வானோர்
பரவு திருநகரும் பாரீர் — விரைகமழும்
ஆர வரைமுனிக்கோர் அஞ்செழுத்தின் உண்மைநிலை
தேர உரைத்த திறம்பாரீர். "

*பின் வருவது ஒரு பழைய பாட்டு:-*

காவிக் கலையிலை யோகப்பல் ஏறக் கடலிலையோ
ஆவிக்கு மீளப் பிறப்பிலை யோகல்லில் அம்புதனை
ஏவிப் பிளப்பது போலே இதம்அறி யாதவரைச்
சேவிப்ப ரோசிவ சங்கர ராசைச் சிவக்கொழுந்தே.

*சங்கரநயினார்கோவில் அந்தாதி* **கூழையந்தாதி** *என்ற பெயரை உடையது. இந்நூலை மாமகோபாத்தியாய உ. வே. சாமிநாதையரவர்கள் அச்சிட்டு வெளியிட்டிருக்கிறார்கள்.*

**திருக்குற்ருலக் குறவஞ்சியில்** சங்கரநயினூர்கோவில் “ **புன்னேக்காவு** ” என்று கூறப்பெறுகிறது. **குமாரசாமி அவதானியார்** இயற்றிய மிக அருமையான “**தெய்வச்சிலேயார் விறலி விடுதூது** ” என்னும் நூலிற் பின்வரும் அடிகளும் பிறவும் படித்துப் படித்து மகிழும் புகழன:—

“ ஓங்கும்
உருவெழுத வொண்ணு ஒருபொருளே உக்ரப்
பெருவழுதி கண்டபிரானே — மருவுமன்பர்
பேராசைக் கேஇணங்கு பெம்மானேப் புன்னேவனச்
சீராசைக் கேசென்று சேவிப்ப — ஓராசை
பற்றி நடந்தேன்என் வாக்கியம்பொற் சித்திரைக்
கொற்றவிழாவுக்குக் கொடியேறிப் — பொற்ருெடிக்கை
ஆவுடைய தேவியும்என் ஐயனுமாய் வெள்விடைமேற்
சேவைதரு நாலாந் திருநாளிற் — கோவிலின்முன்
சந்நிதி வாசலிற்போய்ச் சந்தித்தேன் தெண்டனிட்டேன்
இன்னலெல்லாம் தீர்ந்துகரை யேறினேன் — முன்னவனும்
வீதிவலம் வந்தருளி மீண்டான் திருவாசுற்
சோதிமணி மண்டபத்தின் சுற்றெல்லாம் — வேதியரும்
சைவரும் வேறுள்ள சனங்களும்கை கூப்பிநிற்கும்
தெய்வச் சபையின் சிறப்பெளிதோ — வெய்ய
பிணிமாற மண்கொடுக்கும் பேரருள்எம் கோமான்
பணிமாறு காலம் பணிந்தேன் — தணியாத
ஆனந்த வெள்ளத் தழுந்தினேன். ”

சங்கரன்கோவிலிலுள்ள சங்கரநாராயணர் கோவிலேப் பற்றிப் பின்வரும் குறிப்பு **திருநெல்வேலி கெசட்டியர் (Tinnevelly Gazetteer, vol. I)** என்ற நூலில் (திரு. எச். ஆர். பேட் ஐ. சி. எஸ்., என்பவர் எழுதி அரசாங்கத்தார் வெளியிட்டது) பக்கம் 413 — 414-ல் காணப்படுகிறது:—

(உக்கிரபாண்டியர் காப்பறையனேடு வந்து புற்றையும் பாம்பையும் சிவலிங்கத்தையும் கண்டு கோவில் கட்டினூர்.)

“ இதுதான் சங்கரநயினூர்கோவிற் கோவிலின் தொடக்கம் கதை மேலும் போகிறது. இங்கேதான் சிவபெருமான் தமது

 

மனைவியார் கோமதியம்மைக்கும், 'சிவன்தான் பெரியவன் திருமால்தான் பெரியவன் என்று போரிட்ட சங்கனுக்கும் பதுமனுக்கும் தமது சங்கரநாராயணத் திருவுருவத்தைக் காட்சி தந்தருளினர். இதுவரை சிவனாரைப்பற்றி மட்டுமே குறித்து வந்த கதை பன்னிரண்டாவது நூற்றாண்டில் பெரியார் இராமானுசாச்சாரியாரால் தொடங்கப்பெற்ற தத்துவக் கொள்கையை விளக்கும் வரலாற்றைத் திடீரெனப் புகுத்துகிறது. இந்தக் கோவிலோடு திருமாலுக்குத் தொடர்பினை உண்டாக்கி அதற்கு ஆதரவு தேடும் பொருட்டுச் சங்கரலிங்கத்தின் திருப்பெயராகிய சங்கரநயினர் என்பதற்குப் பதிலாகச் சங்கரநாராயணர் (சிவனும் திருமாலும்) என்ற பெயரை முதன்மையாக்கும் இக்கதையின் பகுதி பிற்காலத்தில் நுழைக்கப்பட்டதென்பது சிறிதும் சந்தேகமில்லாதது. கோவிலின் அமைப்பு அதன்கண் திருமாலுக்கு ஆரம்பத்தில் கோவில் இல்லை என்பதை வெளிப்படுத்துகின்றது. கோவில் இரண்டு பெரும் பகுதிகளை உடையது; அவற்றில் பெரியதில் சிவபெருமானின் அடையாளமாகிய சிவலிங்கம் இருக்கிறது. சின்னதில் கோமதியம்மை இருக்கின்றாள். மூன்றாவதாக இவை இரண்டுக்கும் இடையிலே நாராயணருக்கு ஒரு சிறுகோவில் நுழைக்கப்பெற்றது. ஆனால் இந்தக்கோவில் இந்த மூன்றாவது பகுதியின் புகுத்துதலுக்குப் பொருந்தியதாக இல்லை. எப்படி யெனில்: வழிப்போக்கனாகிய ஓர் ஏழை அடியவனும்கூடத் தெருவிலிருந்தபடியாகவே கண்டு வழிபாடு செய்வதற்கு ஏது வாகச் சிவலிங்கம் அம்மை இவர்கள் சன்னிதிகள் தலைவாயிலி லிருந்து பலதொடர்க் கதவுகளினால் திறந்திருப்பதுபோலச் சங்கரநாராயணர் சந்நிதிக்கு வசதி சிறிதும் இல்லை. அதனால் சங்கரநாராயணர் கோவில் தலைவாசல் இல்லாததாய்ப் பெரிய கோவிலின் உள்ளேயே அடங்கிப்போய்விட்டது. சிவ வழிபாட்டிலிருந்து திருமால் வழிபாட்டுக்கு மாற்றப் பெற்றுள்ளனவாக நாம் கேள்விப்படுகிற கோவில்கள் பல இருக்கின்றன. வடஆற்காட்டிலுள்ள திருப்பதிப் பெரிய கோவிலும், இராமநாதபுரம் ஜில்லா சீவில்லிப்புத்தூரிலுள்ள பெருமாள்கோவிலும் இங்கே குறிப்பிடத்தக்கன. இந்த

முயற்சி வீர வைணவர்களாக இருந்த விஜயநகர மன்னர் காலத்தியது. ஆனால் இம்முயற்சிக்குச் சங்கரநயினார்கோவிலில் 'முன்னாலேயே இரண்டு தெய்வங்களும் இருக்கின்றன' என்ற தந்திரமான ஏற்பாடு செய்யப்பட்டிருந்தது. இந்தக்காலத்திய தருமகருத்தர்கள் இந்தக் கோவிலில் இரண்டு தெய்வங்களும் இருப்பதைப்பற்றி மிகைப்படுத்தி வருவதோடு, நிலங்களுக்குப் பட்டாவைச் சங்கரநாராயணர் என்ற பெயருக்கே ஆக்கி வருகிறார்கள்; என்றாலும் கோவிலின் பூசைமுறைகளில் இப்புதுத் தெய்வம் மிகச் சிறு பகுதிக்கே உரியதாக இருக்கிறது. சங்கரலிங்கப்பெருமானின் திரு. மனைவியராகிய கோமதி யம்மையின் திருவருள் விளக்கமே இக்கோவிலின் மேன்மைக் கெல்லாம் காரணம் என்பதுதான் உண்மை".

## கக. முடிவுரை.

### வேறு இடங்களில் சங்கரன்கோவில்.

சங்கரநயினார்கோவிலின் பெருமையும் ஆடித்தவசில் நடைபெறும் காட்சியையும் அளவிட்டுரைத்தல் முடியாது. அம்பாசமுத்திரத்திற்கு மூன்று மைல் தெற்கே தண்பொருநை யாற்றங் கரையிலே கன்னடியன் அணைக்கட்டின் அருகே குடமுருட்டி என்ற இடத்தில் ஒரு சங்கரன்கோவில் தோன்றி ஆடித்தவசும் காட்சியும் நிகழ்கின்றன. அதுபோலவே தென்காசியில் யானைப் பாலத்திற்கு அடுத்த வடகிழக்கில் சிற்றாற்றங்கரையிலே சங்கரன் கோவிலொன்று புதிதாய் அண்மையில் தோன்றி யிருக்கிறது. அவ்வூரிலேயே கிழக்கே மற்றொரு பழைய சங்கரன்கோவில் இருக்கிறது. இவைகளிலெல்லாம் ஆடித்தவசும் காட்சியும், நடைபெறுகின்றன.

### சங்கரன்கோவிலில் நிகழும் சித்துக்கள்.

இவ்வூரில் வழிபடுவதால் பேசாத பிள்ளைகள் பேசுகின்றன. குட்டம், குன்மம் முதலிய தீராத நோய்களெல்லாம் தீர்ந்து

போகின்றன. பிள்ளையில்லாத பேர்களுக்குப் பிள்ளைப்பேறு உண்டாகின்றது. ஒவ்வொரு மாதக்கடைசி வெள்ளியிலும் மாதாந்தம் என்று அளவில்லாத மக்கள் வந்து காணிக்கை செலுத்திப் போகின்றனர்.

முன்னொரு காலத்தில் தஞ்சை நகரிலே அரசாண்டிருந்த மாராட்டிர மன்னர்களுள் ஒருவருடைய மனைவியார் மகப் பேரில்லாமல் வாடி, சங்கரநயினார்கோவிலின் பெருமையைக் கேள்வியுற்றுத் தாமும் வழிபட்டு நற்பலன் பெற எண்ணித் தமது ஆசையைத் தமது கணவனாரிடம் தெரிவித்தனர். உடனே அரசர் சிற்பம் வல்லாரைச் சங்கரநயினார்கோவிலுக்கு அனுப்பி இங்குள்ள மூர்த்திகளைப் பார்த்துப் புது மூர்த்திகள் செய் வித்துத் தஞ்சையம்பதியின் மேலைவீதியிலே கோவில்கட்டி நிலைபெறச் செய்தார். அரசமாதேவியும் அந்தச் சங்கரநயினார் கோவிலை வழிபட்டு மகப்பேறெய்தி வாழ்ந்தனர். அக்கோவில் இன்றும் இருக்கின்றது.

இங்ஙனமாகத் தம்மைத் தஞ்சமென்று வந்தடையும் அன்பருக்கெல்லாம் அவரவர்கள் வேண்டும் வரங்களையெல்லாம் வேண்டியபடி அருள்செய்து கோமதியம்மையோடு எழுந்தருளி யிருக்கும் சங்கரனார் பெருமையை யாரால் அளவிட்டுரைக்க முடியும்!

**கோமதியம்மை திருவடிகளே சரணம்.**

**சங்கரனார் பொன்னடி மலரிணை வாழ்க.**

" ஆறறிவார் எங்கள் அண்ணல் பெருமையை
யாரறிவார் இந்த அகலமும் நீளமும் "



## முந்நாளைய தர்மகர்த்தர்களின் பெயர்களும் தற்போது உள்ள தர்மகர்த்தர்களின் பெயர்களும், அவர்களின் விலாசமும், பதவியின் காலமும்:

| பெயர் | விலாசம் |
|---|---|
| 1. திரு. சிவஞானம் பிள்ளை | இலஞ்சி |
| 2. ,, சுப்பிரமணிய பிள்ளை | ,, |
| 3. ,, S.N. நல்லகண்ணு பிள்ளை | வாசுதேவநல்லூர் |
| 4. ,, N. கேசவ முதலியார் | திருநெல்வேலி |
| 5. ,, A. L. P. R. அருணசலம் செட்டியார் | ,, |
| 6. ,, ஆறுமுகம் செட்டியார் | தேவகோட்டை |
| 7. ,, P. நெல்லையப்ப பிள்ளை பீ. ஏ., பீ. எல். வக்கீல் | திருநெல்வேலி |
| 8. ,, சங்கர சாஸ்திரியார் | சங்கரன்கோவில் |
| 9. ,, திருவேங்கடம் பிள்ளை | திருநெல்வேலி |
| 10. ,, N. A. V. சோமசுந்தரம் பிள்ளை, பீ. ஏ.. பீ.எல். வக்கீல். | வண்ணார்பேட்டை |
| 11. ,, P. ராமையர் | சங்கரன்கோவில் |
| 12. ,, சாவடி நாராயணசுவாமி பிள்ளை | கடையம். 1915-லிருந்து 16–2–25 வரை |
| 13. ,, T. R. சிவஞானம் பிள்ளை | திருநெல்வேலி 1917-லிருந்து 13–9–25 வரை |
| 14. ,, A. L. C. T. அழகப்ப செட்டியார் | தேவகோட்டை 30–9–25-லிருந்து 23–7–26 வரை |
| 15. ,, I. S. ராமசுவாமியா பிள்ளை | இலஞ்சி ஷை |
| 16. ,, அருணசலம் செட்டியார் | பூலான்குறிச்சி 23–1–27-லிருந்து 16–2–27 வரை |
| 17. ,, S. V. பழனியப்ப முதலியார், பீ. ஏ. வக்கீல் | சங்கரன்கோவில் 30–9–25-லிருந்து 28–4–30 வரை |
| 18. ,, S. அய்யாசாமி பிள்ளை | சிவகிரி 23–1–27-லிருந்து 7–4–30 வரை |
| 19. ,, K. N. கலியாணசுந்தரம் பிள்ளை | கிருஷ்ணபுரம் 4–4—28 லிருந்து 14–4–30 வரை |
| 20. ,, I. S. ராமசுவாமியா பிள்ளை | இலஞ்சி 18–5–30 லிருந்து 22–6–33 வரை |

## முந்நாளைய தர்மகர்த்தர்களின் பெயர் விலாசம் — தொடர்ச்சி

| | | பெயர் | விலாசம் |
|---|---|---|---|
| 21. | ,, | K. S. கற்பகவிநாயகம் பிள்ளை, பி. ஏ., ஓய்வுபெற்ற பொலீஸ் டிபுடி சூப்பெரின்டென்டென்ற் | மேலகரம், தென்காசி 18–5–30 லிருந்து 1–11–34 வரை |
| 22. | ,, | ராமசுந்தர மகாலிங்கம் பிள்ளை | சேத்தூர் 18–5–30-லிருந்து 11–1–34 வரை 12–1–34-லிருந்து 20–2–41 வரை |
| 23. | ,, | T. R. கோமதிநாயகம் பிள்ளை, பீ. ஏ., வக்கீல் | கொக்கிரகுளம் 1-5-41-லிருந்து 27–9–1943 வரை |
| 24. | ,, | K. V. சுப்பையா பிள்ளை பீ. ஏ., | குலசேகரபட்டினம் 28–9–43-லிருந்து 12–3–44 வரை |
| 25. | ,, | N. சீனிவாசகம் பிள்ளை | திருச்சிராப்பள்ளி 13–3–44-லிருந்து 6–11–44 வரை |
| 26. | ,, | M. C. பழனியாண்டி செட்டியார் | சங்கரன்கோவில் 16–11–44-லிருந்து 5 வருடங்கள் |
| 27. | ,, | A. மருதப்பன் செட்டியார் | கரிவலம்வந்தநல்லூர் 16–11–44-லிருந்து 25–2–45 வரை |
| 28. | ,, | S. மாணிக்கவாசகம் பிள்ளை | புளியங்குடி 16–11–44-லிருந்து 1959 முடிய |
| 29, | ,, | S. இராமசுவாமி கோனூர் B. A., B. L, அட்வகேட் | கொக்கிரகுளம் 16–7-45-லிருந்து 15–7–60 முடிய |
| 30. | ,, | A. V. Rm. S. இராமசுவாமி முதலியார் | சங்கரன்கோவில் 13–11–49 லிருந்து தொடர்ந்து பதவியிலிருந்து வருகின்றூர்கள். |
| 81. | ,, | P. ஊர்காவலன் M. L. A. | இடையன்குளம் 8–12–54-லிருந்து தொடர்ந்து ஷை |
| 32 | ,, | E. அமராபதி நாடார் | சங்கரன்கோவில் 8–12–54 ஷை |
| 33. | ,, | M. சங்கரபாண்டியம் பிள்ளை B. A., M. P. | |
| 34. | ,, | R. சென்னப்ப ரெட்டியார் | |

## முன்னாளைய நிர்வாக அதிகாரிகள் :

| | | | | | |
|---|---|---|---|---|---|
| 1. | திரு. | V. சங்கரநாராயண பிள்ளை | 6–11–44-லிருந்து | 14–9–46 | வரை |
| 2. | ,, | K. V. சுப்பையா பிள்ளை B. A. | 15–9–46 | ,, 11–4–48 | ,, |
| 3. | ,, | நரசிம்ம அய்யர் | 12–4–48 | ,, 15–6–48 | ,, |
| 4, | ,, | V. சங்கரநாராயண பிள்ளை | 16–6–48 | ,, 17–10–48 | ,, |
| 5. | ,, | S. லெக்ஷ்மண பிள்ளை B. A. | 18–10–48 | ,, 31–1–53 | ,, |
| 6. | ,, | K. V. சுப்பையா பிள்ளை B. A., | 1—2—53 | ,, 29—9—54 | ,, |
| 7. | ,, | R. பார்த்தசாரதி B. A., B. L., | 30—9—54 | ,, 2–12—55 | ,, |
| 8. | .. | M. சூரியராஜ் B. A., B. L., | 3–12 - 55-லிருந்து | | |
| 9 | ,, | V. M. சிதம்பரம் பிள்ளை. | – —60-லிருந்து. | | |



சிவமயம்

# பிழை திருத்தம்

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 3 | 2 | சிவவயம் | சிவமயம் |
| | 5 | விநாயாகர் | விநாயகர் |
| 4 | 32 | நெறிப்படுததி | நெறிப்படுத்தி |
| 5 | 4 | பெறச்செய்யும | பெறச்செய்யும் |
| | 5 | சிவயோகம் | சிவோகம் |
| | 35 | விரைவிவோ | விரைவிலோ |
| 6 | 6 | கிலகம் | திலகம் |
| | 37 | மகன் | கன்ம |
| 7 | 4 | தியானிதது | தியானித்து |
| | 20 | (சேர்த்துவாசிக்க) | திருச்சிற்றம்பலம் |
| | 31 | தனதற்றே | தனதனற்றே |
| | 37 | றுனகழலிணை | நுனகழலிணை |
| 8 | 2 | நம்பப்தர்கள் | நம்பத்தர்கள் |
| | 11 | பறவையுமாம் | பறவையுமாய் |
| | 25 | முன்றைடம் | மூன்றையும் |
| | 26 | ஒப்புடள் | ஒப்புடன் |
| 9 | 28 | வாணையின் | வாணையின் |
| 10 | 5 | இந்திர | இயந்திர |
| | 26 | அரல்கழல் | அரன்கழல் |
| 11 | 7 | அம்பரொடு | அன்பரொடு |
| 12 | 29 | அஞ்ஞானம் | அஞ்ஞானம் என்று |
| 13 | 16 | அல்லது | அல்லாது |
| 14 | 5 | சக்தி. | சக்தி, |
| | 6 | உடமையாம். | உடமையாம் |
| | 21 | இறைவன் | இறைவன் நம்சிவன் |
| | 31 | ஒருகால் | ஓர்கால் |
| 15 | 3 | தன்மையுடையதேயாகும் | தன்மையுடையதேயாகும். |
| | 26 | நின்று அருள்புரிந்து | நின்று,அருள்புரிந்து, |
| | 30 | தோன்றக்கண்ட | தோன்றக்கண்டு |
| 16 | 14 | பீராட்டியார் | பிராட்டியார் |
| 17 | 25 | காலத்தால் | காயத்தால் |
| 18 | 1 | கிருவாக்கு | திருவாக்கு |
| | 12 | திருமுறைருட்டி | திருமுறையருட்டி |
| 19 | 7 | நிழற்கீழ் | நீழற்கீழ் |
| 20 | 14 | குக்குடம | குக்குடம் |

# ஸ்ரீ சங்கரநாராயண சுவாமி கோவில் அமைப்புப் படம்.

N
W E
S

SCALE - 1″=30′-0″



